





# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

**Vol. 28.** பொருளடக்கம். **No. 4.**

சித்திரபானுவருஷ ஐப்பசிமீ கஉ

**உள்ளடக்கம்.** **பக்கம்.**













# ஆனந்தபோதினி

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| வருடம் 1-க்கு தபாற்கூலி யுள்பட | இந்தியா, ஸிலோன் ... ... | 1—0—0 |
| | பர்மா ... ... | 1—4—0 |
| | பினங், ஸிங்கப்பூர் தென் ஆப்ரிக்கா, பசரா, மெசபொடேமியா முதலிய வெளிநாடுகளுக்கு | 2—0—0 |
| நடந்து கொண்டிருக்கிற வருடத்திய தனிச் சஞ்சிகை விலை | | 0—2—0 |
| சென்ற வருடங்களின் தனிச் சஞ்சிகை விலை | | 0—3—0 |

ஒரு வருடத்திற்குக் குறைந்த சந்தா கிடையாது.

(1) சந்தாதாரராய்ச் சேருகிறவர்கள் பூரணமாகப் பேரை யெழுதி யனுப்பவேண்டும்.

(2) சந்தாத் தொகையை முன்னுடிச் செலுத்தியாவது அல்லது வி. பி. யில் பணம் கட்டியாவது பத்திரிகை பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போது சேர்ந்தாலும் அவ்வருட ஆடிமாத முதல்தான் கணக்கு வைக்கப்பட்டு ஆடிமாத சஞ்சிகை முதல், பத்திரிகை அனுப்பப்படும்.

(3) சஞ்சிகையை வி. பி. யில் வரவழைப்போர் ரிஜிஸ்டர் சார்ஜ் 8-அணுவோடு (18-4-1921 முதல் மணியார்டர் கமிஷன் 10-ரூபா வரையில் 2-அணு வாகையால்) அந்தக் கமிஷன் 2-அணு, வி. பி. க்குத் தபால் சார்ஜ் 0-0-6. ஆக 0-5-6-அதாவது 6-அணு சேர்த்து ரூபா 1-6-0 கட்டி வி. பி. யைப் பெறவேண்டும். மணியார்டர் அனுப்பினுல் 1-2-0 மட்டுமே யாகும். ஆதலால் முன்னுடி மணியார்டர் அனுப்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்வதே நலம், இதைக் கவனிக்கவும்

(4) யாருக்கேனும் சஞ்சிகை சேராவிட்டால் அவர்கள் அம் மாதம் 15-ம் தேதி வரையில் பார்த்து அதற்குமேல் அதே தமிழ்மாத முடிவிற்குள் அவ்விவரத்தைத் தெரிவித்தால்தான் மறுபடி யனுப்பக்கூடும். பிறகு தெரிவிப்போர் கிரைய மனுப்பிப் பெறவேண்டும்.

(5) இடம் மாறும் சந்தாதாரர்கள் அடுத்த சஞ்சிகை தங்களுக்குப் புது விலாசத்திற்கு வந்து சேரும் வண்ணம் தபாலாபீஸோடு ஏற்பாடு செய்துகொண்டு நமக்குப் புது விலாசத்தை யறிவிக்கவேண்டும். இன்றேல் அடுத்த சஞ்சிகை பெரும்பாலும் பழைய விலாசத்திற்கே போய்விடும். அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.

(6) சந்தா நம்பரைக் குறிக்காமல் எழுதும் கடிதங்கள் கவனிக்கப்படமாட்டா. அத்தகைய கடிதங்களால் நேரிடும் தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளி யல்ல. பதிலை விரும்புவோர் ரீப்ளை கார்டாவது தபால் பில்லையாவது அனுப்பினுலன்றி விடை யளிக்கப்பட மாட்டாது.

(7) வியாசங்களை எழுதுவோர் சுத்தமாக இலக்கணப் பிழையின்றித் தங்கள் உண்மைப் பெயருடன், மத தூஷணை, பிறர் தூஷணை, ராஜத்துரோகம் முதலியவையின்றியும், பொது ஜனங்கள் விரும்பக்கூடியனவாகவும் எழுதவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| Life Subscription ஜீவிய சந்தா | இந்தியா, ஸிலோன் | ரூபா | 15—0—0 |
| | பர்மா, முதலிய வெளிநாடுகளுக்கு | ,, | 25—0—0 |

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 28 | சித்திரபானுஹு ஐப்பசிமீ ௧உ 1942ஹு அக்டோபர்மீ 17உ | பகுதி 4 |

## கடவுள் வணக்கம்.

இருள்இரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணிபணம் ஆயிரங்கள் ஆர்ந்த
அரவுஅரசப் பெருஞ்சோதி அநந்தன் என்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை அணையை மேவித்
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என்
கண்ணிணைகள் என்று கொலோ களிக்கு(ம்) நாளே. (1)

வாயோர் ஈரைஞ்ஞூறு துதங்கள் ஆர்ந்த
வளையுடம்பில் அழல்நாகம் உமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச்சென்னி விதானமேபோல்
மேன்மேலும் மிகஎங்கும் பரந்ததன் கீழ்க்
காயாம்பூ மலர்ப்பிறங்கல் அன்ன மாலைக்
கடிஅரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும்
மாயோனை மணத்தூணே பற்றிநின்று என்
வாயார என்றுகொலோ வாழ்த்து(ம்) நாளே. (2)

எம்மாண்பில் அயன்நான்கு நாவினாலும்
எடுத்துஏத்தி ஈரிரண்டு முகமுங் கொண்டு
எம்மாடும் எழில்கண்கள் எட்டினோடுந் தொழுது
ஏத்திஇனிது இறைஞ்சநின்ற செம்பொன்
அம்மான்தன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
அணிஅரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும்
அம்மான்தன் அடியிணைக்கீழ் அவர்கள்இட்டு அலகு
அடியவரோடு என்றுகொலோ அணுகு(ம்) நாளே. (3)




# கலைமகள் திருவிழா

ஒரு நாட்டின் சிறப்புக்கும் வளத்துக்கும் அறிகுறிகளாக இருப்பன, அந்நாட்டு மக்களிடையே காணப்படும் உயரிய நாகரிகமும் கலைச் சிறப்புமே யாகும். கலையும் நாகரிகமும் எந்த நாட்டில் மிகச் சிறப்புற்று திகழ்கின்றனவோ அந்த நாடே உலகில் உள்ள நாடுகளிலெல்லாம் உன்னதம் வாய்ந்ததாகக் கருதப்படும். அறிவை வளர்க்கும் கலைகளும், நயக்கத்தக்க நாகரிகமும் எங்கு காணப்படுமென்றால், குன்றாத விளையுளைத் தரக்கூடிய செழிப்பான நிலங்களும் பிற தேயத்தாரும் விரும்பத்தக்க விதமாய் அளவிறந்த செல்வமும் உடைய நாட்டிலும், வறுமையும் பிணியும் அறியாமையும் இல்லாது இன்ப வாழ்க்கை நடத்தும் மக்களிடத்திலுமே என்று குறிப்பிட வேண்டும்.

நம் தமிழ்நாடு கலைகளுக்கும் நாகரிகத்துக்கும் பேர் போனது. இன்று எவ்விதமிருப்பினும், பண்டைக்காலத்தில் நம் நாடு கலை, நாகரிகங்களில் சிறந்து உலகிலேயே உன்னதம் பெற்று விளங்கியிருந்தது என்பது சரித்திரவாயிலாக அறியலாம். ஐரோப்பிய சரித்திரங்களில், ரோமாபுரியின் நாகரிகத்தைப் பற்றியும், கலைச் சிறப்பைப் பற்றியும், கிரீஸ் தேசத்தின் உயரிய கலை நாகரிகங்களைக் குறித்தும் பிரமாதமாக விவரிக்கப்பட்டிருக்கிறது. மேற்படி, ரோம், கிரீஸ், எகிப்து முதலிய தேசங்கள் கலை நாகரிகங்களில் சிறந்து விளங்கிய அதே காலத்தில், நம் நாடு கலை நாகரிகங்களில் மிகச் சிறப்புற்று ஒளிர்ந்திருந்தது. இது உயர்வு நவிற்சியல்ல; உலக சரித்திரம் கூறும் உண்மையாகும். இன்று நவநவமான கலைகளிலும் நாகரிகத்திலும் தலை சிறந்து விளங்கியிருக்கும் மேனாட்டு மக்கள் அநாகரிகர்களாய், கலாஞானம் கடுகளவுமில்லாதவர்களாய் விலங்குகள் போன்று காடுகளிலும் மலைகளிலும் திரிந்து உழன்று கொண்டிருந்த காலத்தில், நம் நாட்டு மக்கள் கலைகளிலும் நாகரிகத்திலும் முதிர்ச்சி பெற்று, காடுகளைத் திருத்தி நாடாக்கி, நகரங்களில் கூட கோபுரம், மாட மாளிகை

களைச் சித்திர வேலைப்பாடு அமைய அழகாகக் கட்டி, அவற்றில் வதிந்துமகோன்னதமானவாழ்க்கையை நடத்திவந்தனர் என்பது 'மகேஞ்சதாரோ' முதலிய இடங்களில் செய்யப்படும் புதை பொருள் ஆராய்ச்சிகள் வாயிலாக உறுதிப்படுத்தப்பட்டு வருகிறது. இன்று மேனுட்டார் நவ நவமாகக் கலைகளைக் கண்டுபிடித்து உலகுக்கு வழங்கி வருவதாகப் பெருமை யடிக்கப்படுகிறது. நம் நாட்டுக் கலைப்பெருக்கத்துக்குக் கணக்குண்டா? நம் முதறிஞர்கள் கலைகளை அறுபத்துநான்காக வகுத்திருக்கின்றனர். அவற்றில் மாதர்க்குரிய மனோகரக் கலைகள் எத்தனையோ, எளிமையான நங்கையர் நயக்கும் லளித கலைகள் எத்தனையோ இருக்கின்றன. இங்ஙனம் சாதாரணமாக, மலர் தொடுத்தல் முதல் ஒவ்வொன்றுக்கும் கலைகளை யேற்படுத்திய ஆன்றோர்கள் இன்றிருப்பார்களானால், கால வர்த்தமானங்களுக் கேற்ப, புதுப்புதுக் கலைகளையெல்லாம் உண்டாக்கியிருப்பர் என்பது திண்ணம்.

இவ்விதம் பண்டைக் காலத்தில், கலை நாகரிகங்களுக்குப் பேர்போன நம் நாடு இன்று எவ்விதமிருக்கிறது? அது அடைந்துள்ள நிலை என்ன ‹ விவரிக்கவும் வேண்டுமோ! நாகரிகத்தில் நனி சிறந்திருந்த நம் நாட்டு மக்கள் பிற நாட்டு நாகரிகத்தைப் பெரிதென எண்ணிப் பின்பற்றி வருகின்றனர். பல கலைகளுக்கு நிலையமாக இருந்த நம் நாடு அன்னிய நாட்டுக் கலைகளைக் கடன் வாங்கிக் கற்று வருகிறது. இவ்வித நிலைக்குக் காரணமென்ன? நம் நாடு துரதிர்ஷ்டவசமாக அன்னிய ஆதிக்கத்துக்கு அடிமைபடுத்தப்பட்டு விட்டதே யாகும். நாடு அடிமைப்பட அதன் வளமெல்லாம் கொள்ளை கொண்டு போகப்பட்டது. எது கருதி அன்னியர் நம் நாட்டைத் தங்கள் வசப்படுத்தினார்களோ அந் நோக்கத்தை நிறைவேற்றிக்கொண்டுவருவதில் ஆச்சரிய மென்ன இருக்கிறது? திருவள்ளுவர் பெருமான் கூறியபடி, 'கெட்டவிடத்தும் வளங்குன்றா நாடு' ஆயினும், அன்னியர் அதன் வளங்களையும், பண்டங்களையும் செல்வங்களையும் விடாது சுரண்டிப் போய்க் கொண்டே இருந்தால், அதன் வளமும் செல்வச் செழிப்பும் எப்படி எஞ்சும்? ஆகவே தான், நம் நாடு பண்டைச் செல்வச் செழிப்பையும் வளங்களையும் இழந்து வறுமைக்கும் பிணிகளுக்கும் அறியாமைக்கும் நிலைக்களனுய்ப் போய் விட்டது. இந் நிலையில் கலைகளின் வளர்ச்சிக்கு இடம் எங்கு இருக்கும்? நாகரிகம் தான் எப்படி முதிர்ச்சி பெற முடியும்?

நம் மக்கள் வயிற்றுப்பாட்டுக்கே திண்டாடும்போது, அவர்கள் கலை வளர்ச்சியைக் கருதுவதற்கும் நாகரிகமாய் வாழ வேண்டுமென்று நினைப்பதற்கும் அவகாசமேது? எனவே தான், அவர்கள் தங்கள் பிழைப்புக்கு எது ஆதாரமா யிருக்கிறதோ அதை மேற்கொள்ள லாயினர். நம் நாட்டின் பண்டைப் பெருமை

கலை மறந்து, கலாசாரத்தைத் துறந்து, நாகரிகத்தை நவோது, அன்னிய அரசாங்கத்துக்குப் பல்லாண்டு பாடி, அவர்கள் மொழியைக் கற்று உத்தியோகஞ் செய்து உயிர் வாழ்ந்தால் போதும் என்ற அடிமை மனோபாவத்தை நம் மக்களில் பெரும் பாலார் அடைந்ததில் ஆச்சரியமில்லை; குறை கூறியும் பயனில்லை.

இவ்வித இழி நிலையை மாற்றவே பெரியார் பலர் முயன்று வருகின்றனர். நம் நாட்டின் இன்றைய கேவல நிலைக்கு—மக்களின் அடிமை மனோபாவத்துக்கு—அவர்கள் நடத்திவரும் கேவல வாழ்க்கைக்கு—மூலகாரணம் நம் நாடு சுதந்திரமின்றி யிருப்பதே யாகும் என்று நன்கு உணர்ந்து, அதன் விடுதலைக்காக அவர்கள் பெருஞ் சேவை புரிந்து வருகின்றனர்.

மற்றுஞ் சில அறிஞர்கள் "நாடு பழையபடி சுதந்திரமடைவது இருக்கட்டும்; அதற்கு முன், நம் மக்கள் மறந்துவிட்ட கலை ஞானத்தையும், நாகரிகத்தையும் புத்துயிர் பெற வைத்தால் பெரு நன்மை பயக்கும்; முதலில் தாய் மொழிப்பற்றை யுண்டாக்கிவிட்டால், பின்னர் அதன் வாயிலாக மக்கள் பழைய இலக்கியங்களையும் காவியங்களையும் இதிகாசங்களையும் படித்து நம் நாட்டின் பண்டைச் சிறப்பையும், நம் முன்னோர் கலை நாகரிகங்களின் உயர்வையும் உணர்வர்; நாமும் நம் மூதாதையர்களைப்போல் ஏன் கலை நாகரிகங்களில் உயர்வடைந்து பெருமைபட வாழக்கூடாது என்ற ஆசை யேற்படும். எனவே, எல்லோரும் சுதந்திர சேவையில் ஆர்வத்தோடு ஈடுபடுவர். மக்களின் பெருஞ் சேவை, தியாகங்களால், விரைவில் நாடு விடுதலை யடைவதற்கு வழி யேற்படும்" என்று கருதி, கலைத்துறையில் தொண்டாற்றி வருகின்றனர்.

சமீபத்தில் ஏற்பட்டிருக்கும் 'சென்னைத் தமிழ்ச் சங்கம்' இவ்வித நோக்கத்தோடு சேவை புரியவே முன் வந்திருப்பதாக நாம் கருதுகிறோம். மேற்படி சங்கத்தின் நோக்கத்தையும் சட்டங்களையும் பார்க்க நேர்ந்தபோது இவ்வித உறுதிப் பாடே நம் உள்ளத்தில் உதித்தது.

"நல்ல காலம் பிறக்கவே போகிறது. இப்போதோ எங்கும் இருள் சூழ்ந்து கிடக்கிறது. 'எப்போது பொழுது விடியும்' என்று உலகம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. அப் புதிய உலகம் தோன்றும் போது உலகத்துப் பழங் குடி மக்களான தமிழர் பின்னே தயங்காது முன்னணியில் நின்றுழைக்க முந்தவேண்டும். தமிழ்நாடும் பொழுதோடு விழித்துக்கொண்டு தமிழ் உணர்ச்சியிற் பிறந்த தனிப்பெருக்கத்தோடு விளங்குகிறது. இவ் வுணர்ச்சியும் ஊக்கமும் வெறும் ஆரவாரமாகச் சிதறுதபடி பல வகையிலும் பல துறையிலும் செந்தமிழ்த் தொண்டில் ஒன்று கூட வேண்டி இச் 'சென்னைத் தமிழ்ச்சங்கம்' தோன்றியுள்ளது. தமிழே பல வகைப்பட்ட நம் மனைவரையும் ஒரு சேர அணைக்கும் தாய். தமிழ்க்கலையே நமது உயிர் வாழ்க்கையின் அடிப்படை......

வாழப் போகிறவர் தமிழர் அனைவருமே......அறிவுத் துறையில் இயற்கையாகவே அன்பும் இன்பமும் தூய்மையும் அலைபுரள்கின்றன. உலகம் முன்னேறிக்கொண்டு போகையில் நாமும் முன்னேறப்போதிய புது நூல்கள் எழுதுவித்து அச்சிடல் வேண்டும்.........தமிழரின் பண்டைச் சிறப்பு இலக்கியக் கடவுட்சுவை ததும்பி நிற்பதோடு ஒற்றுமை நோக்கோடு எழுந்த அறிவொளி வீசியும் நிற்கிறது. சைவ சித்தாந்தம், வைணவம் இவற்றின் அடிப்படையை அறியத் தமிழன்னையின் இடத்தில் நாம் வரவேண்டும். மற்றைய மதங்களையும் தமிழர் தனிச்சிறப்பு வகையில் வளர்த்துள்ளனர். இப் பெரும் புதையலை உலகம் இன்னும் அறிந்தபாடில்லை. இங்குள்ள கடவுட் பாடல்களும் பிற மொழிக்கில்லாத சிறப்பு வகையில் தமிழில் அமைந்துள்ளன. இயலோடு இசை இயைந்து நடக்கிற இயல்பு இங்கேயே உண்டு. தமிழிசையைப் பல வகையிலும் வளர்த்தல் வேண்டும்.........இம் முயற்சியை வெற்றிபெற நிறைவேற்றி வைப்பது தமிழர் கடமை."

என்று மேற்படி சங்கத்தார் வெளியிட்டுள்ள ஒரு விண்ணப்பத்தில் தாங்கள் செய்யப் போகும் வேலையைப் பற்றி ஒருவாறு விவரித்திருக்கிறார்கள். "தமிழ்க் கலை யொழுக்கினையும் தமிழ் மொழியினையும், தமிழ் நலன்களையும் அரசியற் கட்சிப் பூசலின்றிப் போற்றுதல், பரப்புதல், வளர்த்தல், காத்தலு"ம், மேற் கண்ட கொள்கைகளுக்கு அநுசரணையான காரியங்களைச் செய்தலுமாகிய சென்னைத் தமிழ்ச் சங்கத்தின் கொள்கை எவ்வளவு சிறந்தது என்று நாம் சொல்ல வேண்டுவதில்லை. தமிழ் மூவேந்தர்களில் தலை சிறந்தவர்களான பாண்டி மன்னர்கள் மதுரைமா நகரில் தலைச் சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம் என முறையே ஏற்படுத்தி நடத்தி வந்தார்கள் என்பது கதையாய்ப் போய்விட்ட இக் காலத்தில், தமிழ்ப் பேரறிஞர்கள் ஒரு சிலரால் சென்னைத் தமிழ்ச்சங்கம் ஏற்பட்டிருப்பது வரவேற்கத் தக்கதாகும். 'விளையும் பயிர் முளையிலே' என்றபடி, மேற்படி படி சங்கம் ஏற்பட்டு இரண்டு மாதங்களும் முற்றுப் பெறா திருக்கையிலேயே, அது பல அரிய வேலைகளைச் செய்திருக்கிறது. அதன் சார்பில் பல அரிய சொற்பொழிவுகள் நிகழ்ந்து வருகின்றன. நவராத்திரியை முன்னிட்டு, 'கலைமகள் திருவிழா' வேறு நடந்து வருகிறது. இவைகளை யெல்லாம் பார்க்கும்போது, சென்னைத் தமிழ்ச் சங்கத்தார் நம் கலை நாகரிகங்களைப் புத்துயிர் பெறச் செய்வர் என்றும், ஒவ்வொரு தமிழர் இல்லத்திலும் கலைமகளை எழுந்தருளிவித்து நவராத்திரி சமயங்களில் மட்டுமல்லாது நாடோறும் திருவிழா நடத்தி வரும்படி செய்வர் என்றும் நமக்கு நம்பிக்கை யுண்டாகிறது. ஆகவே, தமிழ்நாடு முழுதும் சென்னைத் தமிழ்ச் சங்கத்தார்க்கு—அவர்கள் புரியவிருக்கும் சிறந்த தொண்டுக்கு—தகுந்த ஆதரவு அளிக்கவேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

திரு. வினோபா பாவே யாரென்று சென்ற ஆண்டு கேட்டிருந்தால், வாசகர்கள் திகைத்திருப்பார்கள். ஆனால், இன்று அப்படியன்று; வினோபா பாவே என்னும் பேர் பலகோடி பாரத மக்களின் உள்ளங்களில் ரீங்காரம் செய்கிறது. வினோபாதான், பேச்சுரிமை கோரி காந்தியடிகள் சென்ற வாண்டு தொடங்கிய சத்தியாக்கிரஹப் புனிதப் போரில் பிடிவாத குணமுடைய அரசாங்கத்தின் கொடுமை யென்னும் வாளுக்கு முதற்பலி யானவர்! அந்நான் தொட்டு, அப்பெரியார் பேர் உலக மக்களின் உள்ளங்களிலும் இடம் பெற்று விட்டது

## எண்ணம் புகுந்த விதம்

யான் மத்திய மாகாணத்தில் இருந்தேன். 1939-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஓர்நாள். பம்பாய் கிரானிக்கல் கிழமை வெளியீட்டைப் புரட்டிக் கொண்டிருந்தேன். அதில் "கர்மயோகி" என்ற தலைப்பு காணப்பட்டது; ஆவலுடன் நோக்கினேன். அக் கட்டுரை யெழுதியவர், காந்தியடிகள் அடிச்சுவடுபற்றி, கிராம முன்னேற்றத்தில் தம்மை யொப்படைத்துக்கொண்டு, தமது "இராஷ்டிரவாணி' மூலம் குடிசைத் தொழிலுக்குப் பெருந் தொண்டாற்றிவரும் திரு. ஜதீஷ் சந்திரதாஸ் குப்தா என்னும் பேருடைய அறிஞர். அக் கட்டுரையில் வினோபாவைப்பற்றித்தான் எழுதி யிருந்தார்.

"இராஷ்டிரவாணி" ஆசிரியர், வினோபாவைப்பற்றி யெழுதுகையில், அவரது உருவத் தோற்றத்தைப் பற்றியும், விளம்பரமும், ஆடம்பரமுமற்ற தொண்டைப்பற்றியும், தமது சிறந்த ஆங்கில நடையில் விளக்கி யிருந்தார். கீதையின் கர்மயோக அத்தியாயத்தில், கிருஷ்ணன் விளக்கும் கர்மயோகியின் இலக்கணங்களையும், தன்மைகளையும் அப்படியே வினோபாவுக்கு உரிமையாக்கி யிருந்தார், ஆசிரியர். அந்தக் கட்டுரையைப் படித்த பின், பெரியார் வினோபாவைத் தரிசிக்க வேண்டுமென்று என் மனம் துடித்தது.

அடுத்த நாள், அந்த கர்மயோகி வாழு மிடத்தை நோக்கிப் பயணப் பட்டேன். மோட்டார் பஸ் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. ஆனால், என் மனக்குதிரை மோட்டாரையும் முந்திக்கொண்டு விட்டது. அது செய்த வேலை யெல்லாம் பெரியார் வினோபாவைப் பற்றியதுதான். நாட்டுப்பற்றுடன் பாரததேவிக்குப் பணிபுரியும் ஒரு பெருந்தலைவரை நான் தன்னந்தனியே சென்று பார்ப்பது அதுவே முதல் தடவை. ஆகவே, அவரை எவ்வாறு தரிசிப்பது? பார்க்குங்கால் என்னென்ன கேட்பாரோ? கேட்டால் என்ன விடை பகர்வது? என்றெல்லாம் எண்ணமிட்டவனாய்ப் பஸ்ஸில் உட்கார்ந்திருந்தேன். ஆகவே, என் பஸ் இயற்கை தெய்வம் வாழிடமாகிய அந்த சாத்பூரா மலைத்தொடரின் ஊடே சென்றபோது, அந்த மலையழகு கண்டு களிக்கவும் என் கண்கள் தவறி விட்டன. "பவு

னார், பவுனார்" என்றார்கள் பஸ்ஸிலிருந்த பிரயாணிகள். பிற்பகல் மூன்று மணி. பஸ்ஸ— ஆற்றின் கரையில் நின்றது; நான் இறங்கினேன்.

பவுனார் என்னும் ஊரில்தான் வினோபாஜி தங்கியிருப்பதாய்ப் படித்திருந்தேன். பவுனார் வார்தா—நாகபுரி பாதையில், வார்தாவிலிருந்து 6 கல் தொலைவில், "தாம் நதி என்னும் ஆற்றின் கரையி லிருக்கிறது. இவ்வாற்றின் குறுக்கில் அணை கட்டி, அதன் நீரை குழாய் வழியாய் வார்தாவிற்குக் கொண்டுபோய் குடிநீராய்ப் பயன் படுத்துகின்றார்கள். அணைக்கட்டின் அருகே, ஆற்றின் கீழ்க்கரையில், யான் பஸ் இறங்கிய விடத்திலிருந்து கூப்பிடு தூரத்தில், ஓர் அழகிய செங்கிறக் கட்டிடம் ஒளிர்ந்து நின்றது. அது பல்லாயிரக்கணக்கான ரூபாய்கள் பெறுமதியுடையதாய்க் காணப்பட்டது. அக் கட்டிடத்தின் உச்சியில் மிகப் பெரிய மூவர்ணக்கொடி, எவராலும் பறிக்க முடியாத வுரிமையுடன், பெருமிதத்துடன் பறந்து கொண்டிருந்தது.

அக் கட்டிடம், காங்கரஸ் காரியக்கமிட்டி உறுப்பினரான திரு. ஜம்னாலால் பஜாஜ் அவர்களுக்குச் சொந்தமானது. சுற்றிலும் பரந்து பசுமை துன்னும் குறிஞ்சி நிலப்பரப்பு, வானளாவ தொலைவில் நிலைகொண்டு நிற்கும் சாத்பூரா மலைத்தொடர், ஆற்றின் அணைமீது நீர் வழிந்து "ஜோ" வென்று விழும் ஒலியாகவெல்லாம் சேர்ந்து "தெய்வம் வாழிடமோ" வென்று சொல்லும் தன்மையா யிருந்தது, அந்த மாளிகை. அதில்தான் வினோபாஜி வதிந்து இருந்தார்.

பஸ்ஸிலிருந்து இறங்கினவன் மாளிகையைப் பார்த்த வண்ணம் ஆற்றின் படுக்கையிலேயே நடந்து மாளிகையை யணுகினேன். ஆற்றிலிருந்து மாளிகைக்குச் செல்லும் படிக்கட்டு வழியே ஏறி மாளிகையின் மண்டபத்தை யடைந்தேன். அந்தத் தனி யிடத்தில் ஆளரவமே காணக் கிடைத்திலேன்.

## முனிவர் தரிசனம்

நான் மண்டபத்தில் நின்றேன். என் கண்கள் கூடத்தினுள்ளே பாய்ந்து துழவின. அங்கோர் நாடா பின்னிய கட்டில்; அதன் மீது ஒரு முரட்டுக்கம்பளி விரித்து ஒருவர் மல்லாந்து படுத்துக் கொண்டிருந்தார். அவர் மேனி செவந்து மெலிந்திருந்தது. அவர், ஒரு ஜமக்காளம் போன்ற தடித்த கதர் வேஷ்டியை முழங்கால் வரை உடுத்தி யிருந்தார். அவர் முகம் நீண்டும், கன்னங்கள் ஒட்டியும் இருந்தன. அவரது கண்கள் ஆழத்தில் புதைந்திருந்தன. ஆனால், அவை குழியில் கிடக்கும் வைரம்போல் ஒளியுடன் சுருசுருப்பாய் விளங்கின. தலைமயிர் அடியுடன் கத்தரிக்கப்பட்டிருந்தது. அவர் கையில் ஒரு புத்தகம் இருந்தது. அவர் கண்ணும் கருத்தும் அப் புத்தகத்தில் அழுந்தி யிருந்தன. அவர் உலகை மறந்தே கிடந்தார். நான் ஓவியம்போல் அசைவற்று நின்றிருந்தேன். அவர்தான் வினோபாஜி யென்று நிர்மானித்தேன். நின்றேன்; ஒன்று. இரண்டு, மூன்று நிமிஷங்கள் நின்றிருக்க கூடும். ஆனால், அவர் என்னைப் பார்த்தாரில்லை. நான் போயிருப்பதை யுணர்த்தும் பொருட்டு மெல்ல அரவம் காட்டினேன்; அது அவருள்ளத்தை அசைக்கும் திறனற்றது. "கர்மயோகி" என்ற சொல்

ளது எவ்வளவு தகுதியான வர்ணனை! என்பதைக் கண்ணுறக் கண்டேன். மறுபடியும் ஓசைபட அரவம் செய்தேன். அவர் யோகம் கலைந்தது. கண்கள் என்மீது சாய்ந்தன. என் கைகள் குவியத் தலையும் வணங்கிற்று. அவர் முகத்தில் முறுவல் பூத்தது. அம் முறுவல், "நீயும் எங்கள் நாட்டின் மகன்தான், வா" என்று கூறுவது போன்றிருந்தது.

அதே சமயத்தில் "நீர் யார்?" என்ற வார்த்தைகள் சிந்தனையுடன் தொக்கி வெளிப்பட்டது. அதற்கு நான், "நான் சென்னை மாகாணத்தான்; தங்கள் தரிசனம் காண வந்தேன்" என்று விநயத்துடன் பதிலிறுத்தேன்.

அவர் அக்கணமே கட்டிலில் இருந்து எழுந்து, ஒரு கையில் கம்பளியும், மற்றொரு கையில் புத்தகமுமாய் கூடத்தின் மற்றொரு பக்கம் சென்று கம்பளியைத் தரையில் பரப்பி இன்னொரு கம்பளியைக் கொண்டு வந்து எதிரில் போட்டு, அதில் என்னை யமரும்படி கூறி, தாமும் அமர்ந்தார்.

## நாட்டுமொழி

பிறகு அவர், "நீ எதற்காக என்னைப் பார்க்க விரும்பினாய்?" என்று இந்தி மொழியில் கேட்டார். எனக்கோ இந்தி நன்றாய்த் தெரியாது." ஆகவே ஆங்கிலத்தில் பதிலிறுத்தேன்.

"நீர் ஆங்கிலத்தில் பேசுகிறீரே! இந்தி தெரியாதோ?"

"நான் சென்னை மாகாணத்தான். எனக்கு இந்தி தெரிந்திருக்க வேண்டுமென்று எவ்வாறு தாங்கள் எதிர்பார்க்க முடியும்?"

"ஏன் எதிர்பார்க்கக் கூடாது? இந்தி, நமது நாட்டின் பொதுமொழி. சென்னை மாகாணம் பாரதநாட்டின் ஒரு பகுதியேயன்றி, இலங்கை போன்று இந்துமகா சமுத்திரத்தில் உள்ள ஒரு தீவு அல்ல. ஆகவே, இத்தக்காலத்தில் சென்னை மாகாணத்தாரும் இந்தி தெரிந்திருக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது முற்றிலும் நியாயம்" என்றார்.

எனக்கோ, மேற்கொண்டு அவருடன் விவாதிக்க விருப்பமில்லை. ஆகவே, யான் "இந்திமொழி தெரிந்து கொள்ளாதிருப்பது என்பாலுள்ள குறைதான். சந்தர்ப்பம் நேருங்கால் அதைப் பயிலுவேன்" என்று உறுதி கூறினேன்.

"என்னைப் பார்க்க வேண்டுமென்று சொன்னீரே; எதற்காக வென்று என்னைப் பார்க்க விரும்பினீர்," என்றார்.

"ஐயா! நான், திரு. ஜதீஷ் சந்திர தாஸ் குப்தா அவர்கள், நமது இராஷ்டிர வாணியில் தங்களைப்பற்றி யெழுதி யிருந்த கட்டுரை யொன்றே தங்களைத் தரிசிக்க வேண்டித் தூண்டிற்று. அங்கே அவர் எழுதிய கட்டுரை என்னைக் கவர்ந்தது. இங்கே தங்கள் சந்நிதியில் நான் கவரப்பட்டு நிற்பது போல், அருகில் காணும் இயற்கை வளப்பெலாம் என்னை ஈர்த்துக்

கொண்டு விட்டன. இவையெல்லாம் உள்ளத்திற்கு அமைதியும், இன்பமும் நல்குகின்றன. ஆகவே, தங்களுடன் நான் சிறிது காலம் தங்கியிருக்க விழைகின்றேன். பிறகு தங்கள் திருவுள்ளம்."

"இருக்கலாம்; உண்மை. ஆனால் இங்கு நீர் என்ன செய்ய எண்ணம்? மனிதன் தொழிலற்றுச் சும்மாவிருந்து இன்பம் காண முடியாது என்பது என் சித்தாந்தம். இங்கு என்ன தொழில் உளது? இப்போது இந்திய நாடு போராட வேண்டியதெல்லாம் இராட்டையோடு தான். உமக்கு இராட்டையில் நூற்கும் பயிற்சியுண்டோ?"

"இல்லை" யென்று நாணத்துடன் கூறினேன். நான் அவ்வாறு கூறியதையும், அப்போது எனக்கிருந்த மனோபாவத்தையும் வினோபாஜி அறிந்து கொண்டார்.

"ஆம், நீர் அவசியம் இராட்டை பழக வேண்டும். அப்படிப் பழக இது தகுதியான இடமன்று. நால்வாடி தான் தக்க இடம். அங்கே ஆசிரமத்தில் புதிதாய்ப் பழகுபவர்கட்கு ஏற்ற வசதிகள் அனைத்தும் அமைக்கப்பட்டுள்ளன" என்று சொல்லிக்கொண் டிருக்கும்போது, முழங்கால் வரை கதர் உடுத்தியிருந்த ஒரு தொண்டர், உணவுப் பொருள்கள் நிறைந்த தாம்பாளம் ஒன்றைக் கொண்டுவந்து வைத்து விட்டுப் போனார். அதுவரையும் ஆளரவம் இல்லாதிருந்த அவ்விடத்தில் அத் தொண்டர் இருந்தது அதிசயமாய்த் தானிருந்தது, எனக்கு. ஆனால், பிறகு விசாரித்ததில், மற்றும் இரு தொண்டர்கள் வினோபாவுக்குப் பணி செய்து கடைத்தேற அங்கு வந்திருப்பதாய் அறிந்தேன். அங்கு கொண்டு வைக்கப்பட்ட தாம்பாளத்தில் கொஞ்சம் பேரீச்சம் பழமும், சிறிது தயிரும் வைக்கப்பட் டிருந்தன. பிறகு, ஒரு ஆப்பிளும் கூட் கொண்டுவந்து வைக்கப்பட்டது. இவை தாம் அவருடைய தற்காலிகப் பத்திய உணவாகும்.

## கற்றறி ஞானி

பெரியார் வினோபா பாவே நிரம்பக் கற்றவர். இலக்கியத் துறையில் அடங்காத காதலுடையவர்! தமது தாய்மொழியாகிய மகாராஷ்டிரத்தில் அரிய நூல்கள் பல ஆக்கியுள்ளார். அம்மொழியில் ஆற்றிய இலக்கியத் தொண்டு, அம் மொழி நாட்டில் வாழும் வரை மறக்கப்படாததாகும். அவற்றில் தலையாயது, செய்யுள் வடிவில் அவர் ஆக்கியளித்த கீதையாகும். இதுவரை வினோபாவின் கீதை சமார் ஒன்றரை லட்சம் பிரதிகள் வரை மகாராஷ்டிர மக்களால் படிக்கப்பட்டு வருகின்றதாம்! ஆகவே, அந் நாட்டு மக்கள் வினோபாவை, துக்காராம், ராமதாஸ் ஆகியோர் வரிசையில் வைத்துப் போற்றுகின்றனர். நாடோறும் அந்தப் பரந்த மகாராஷ்டிர நாட்டின் பல பாகங்களிலிருந்து பிரபுக்களும், அறிவாளிகளும், கலை வல்லுனர்களும் வந்து தரிசித்துப் போகின்றனர்.

## வினோபா பல மொழிப் பண்டிதர்

வினோபாஜி எப்போதும் படித்த வண்ணமிருப்பார். நான் இப்படிச் சொல்லுவதிலிருந்து, அவரை வெறும் புத்தகப் பூச்சி யென்று வாசகர்கள்

நினைத்துவிட மாட்டார்களென்று நம்புகிறேன். அவர் அரிய நூல்களை ஆராய்வார். அவற்றிலுள்ள அரிய பெரிய இலட்சியங்களைத் திரட்டுவார்; அத்தனையையும் தமது நித்திய வாழ்வில் புகுத்திக் கொண்டு, மற்ற மக்களும் தம்மைப் பின்பற்றும்படி, தாம் ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறார். அவர் இந்த 47 வயதிலும் தம்மை, ஒரு மாணவனாகவே கருதுகிறார். எதையும் நுணுகி ஆராயும் இயல்பினர். ஓதாதுணரும் ஆற்றலும் அவருக்கு உண்டு போலும். இதை விளக்க ஒரே ஒரு சான்று கூறுவது அவசியமாகும்.

நான் நால்வாடி ஆசிரமத்திலிருந்தபோது ஒரு நாள் காலையில் பவுனாருக்குப் புறப்பட்டேன். அப்போது காலை 7 மணி இருக்கும். மூடுபனி கொட்டிக்கொண்டிருந்தது. பொல்லாக் குளிர் உடம்பிலுள்ள சதையைப் பிய்ப்பது போல் வருத்திக் கொண்டிருந்தது. யான் எப்படியோ நடந்து வினோபாஜின் ஆசிரமத்தை அடைந்து விட்டேன். ஆசிரமத்தின் முன் மண்டபத்தில் ஒரு கருப்புக் கம்பளியில் ஆச்சார்யாஜி வீற்றிருந்தார். காந்தி அடிகளைப் போல் அவரும் சட்டை போட்டுக் கொள்ளும் வழக்கமில்லை. நவம்பர் மாதத்து நடுக்கும் குளிரில் வெற்றுடம்புடன் தான் இருந்தார் வினோபா. அவர் கையில் ஒரு அரபி மொழிப் புத்தகமிருந்தது. அவர் பக்கத்தில் ஒரு முஸ்லிம் அமர்ந்திருந்தார். நான் ஆச்சார்யா வினோபாவின் அடிகளில் பணிந்து எழுந்தேன். வினோபா புன்முறுவல் செய்த முகத்துடன் என்னை அமரும்படி சொல்லி தாம், பயிலும் வேலையை மேற்சென்றார்.

அந்த முஸ்லிம், அந்த அரபி புத்தகத்தைப் படிக்கும் போது வினோபாஜி கருத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார்; என்றாலும் இடையிடையே தமது சந்தேகத்தை அந்த முஸ்லீம் நண்பரிடம் சொல்லுவது போல் எனக்குத் தோன்றிற்று. அதன் பிறகுதான் அந்த முஸ்லீம் நண்பர் வினோபாஜிக்கு அரபி போதிக்கும் ஆசிரியராய் இருக்கலாமோ வென்னும் ஐயம் தோன்றிற்று. மேலும் பல சமயத்தில் முஸ்லீம் நண்பர் உச்சரிப்பதைத் தாமும் சிறிது மாற்றி யுச்சரிப்பார். அதை முஸ்லீம் நண்பரும் அங்கீகரிப்பவர் போல் புன்சிரிப்பு கொள்வார். இவ்வாறு அரைமணி நேரத்திற்கு மேல் கழிந்தது. பிறகு, முஸ்லிம் நண்பர் வினோபாவிடம் விடைபெற்றுக்கொண்டு போக ஆயத்தமானார். அப்போது நான், முஸ்லிம் நண்பரைப் பார்த்து. "ஐயா, உங்கள் இருவரில் யாருக்கு யார் ஆசிரியார்?" என்று ஒரு போடு போட்டேன். அவர் என் கருத்தும், கேள்வியும் யாதென்று தெரிந்து கொண்டு விட்டார்; அவருக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவர் என்னை நோக்கி, "உங்கள் சந்தேகம் இயல்பானது தான். யான் ஆச்சார்யாவுக்கு அரபி மொழி பயிற்றிவருகிறேன். பாடம் தொடங்கி மூன்று மாதந்தான் ஆயிற்று. யான் அம் மொழியை அவருக்குப் பயிற்றி வருவது போன்று, மூன்று திங்களில் ஆச்சார்யாவும் எனக்குப் பயிற்றும் ஆற்றலடைந்து விட்டார். ஆகவே, நாங்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் ஆசிரியர்கள் தாம்" என்று இடிபிடியென்று சிரித்தார். ஆச்சார்யாவும், யானும் முஸ்லிம் ஆசிரியருடன் கலந்து சிரிக்கலானோம்.

(தொடரும்.)

# "நவராத்திரியும்- சரஸ்வதி பூஜையும்"

(ப. ரே. ராஜரத்தினம்.)

கலைக்கு இருப்பிடமானவள் 'கலைமகள்'; கலைவாணி; சரஸ்வதி. சரஸ்வதியைப் பூஜிக்க சகலரும் விரும்புவர். 'கலைமகளை' கற்றவர் கொண்டாடவேண்டியது கடமை. புராண ரீதியாகவும், சரித்திர சம்பந்தமாகவும் உடைய முக்கியமான இந்துப்பண்டிகைகளில் இதுவும் ஒன்று. பிரதி வருஷமும் புரட்டாசி மாதம் அமாவாசையினின்று ஒன்பது நாட்கள்தான், 'நவராத்திரி' எனப்படும். கடைசி நாளாகிய நவமி-திதியன்று சரஸ்வதி பூஜையையும், மறுநாள் தசமிதிதியன்று விஜய தசமியையும் கொண்டாடுவார்கள்.

மஹிஷாசுரன் என்ற அரக்கனுடைய கொடுமை தாங்காது, அவனை சம்மரிப்பதற்குச் சக்தியைப் பெற வேண்டி தேவியானவள் அகோராத்ரம் ஒன்பதுநாள் ஊசியின்மேல் நின்று கடுந்தவம் புரிந்து, பத்தாவது நாளில் (தசமி) புன்னை விருக்ஷ ரூபமாக இருந்த அவ்வரக்கனை சம்மாரம் செய்து ஜெயத்துடன் திரும்பி வந்ததால், அதற்கு 'விஜயதசமி', எனப்பெயர் வந்ததாக ஐதீகம்.

மேற்படி புராண சம்பந்தமான ஒன்பது தினங்களையும், நமது முன்னோர்கள், புண்ணியமாகக் கருதி மிகவும் பக்தி-சிரத்தையுடன் கொண்டாடினார்கள். அத் தினங்களில் ஒவ்வொரு வீட்டிலிருக்கும் பெரியவர்கள் அதிக ஆசாரமாகவும்; நியம நிஷ்டைகளுடனும், பூஜாகிருகத்தைச் சுத்தமாக வைத்து; பட்டினியிருந்து தேவிபூஜை செய்து உபாஸிப்பார்கள். சந்தியா காலத்தில் அஷ்டோத்திர ஸஹஸ்ரநாம—அர்ச்சனைகள்; புராண இதிகாச படனங்கள் நடைபெறும்.

சகல தேவாலயங்களிலும் அம்மன் புறப்பட்டு அதற்காக பிரத்தியேகமாய் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்திற்கு வந்து கொலு வீற்றிருப்பாள். அதிகப்படியான பூஜைகள்; அர்ச்சனைகள்; தூபதீப நைவேத்தியங்கள்; அலங்காரங்கள்; மேளவாத்திய பாட்டுக்கச்சேரிகள் விசேஷமாய் நடக்கும். அக்கம் பக்கத்திலுள்ள ஊர்களிலிருந்து பக்தகோடிகள் திரளாக வந்து தரிசனம் செய்வார்கள்.

பத்தாவது தினமாகிய விஜயதசமி யன்று அம்மன் புறப்பட்டு, சமீபத்தில் வன்னி விருக்ஷம் இருக்கும் இடத்திற்கு எழுந்தருளி அம்பு போட்டுவிட்டுத் திரும்பும் காட்சி கண் கொள்ளாததாய் இருக்கும்.

வீடுகள் தோறும் சரஸ்வதி பூஜை யன்று, தங்கள் தங்கள், கல்வி-கலை-தொழில்களுக்குரிய புராண-இதிகாச-சாஸ்திர புத்தகங்களையும்; ஆயுதங்களையும் வைத்து பூஜை செய்து, சரஸ்வதியை மனதாரத் தோத்தரித்து, வந்தனை வழிபாடு செய்து; மறுநாள் விஜயதசமி யன்று நல்ல சுபவேளை

பார்த்து, புத்தகங்களைப் படிக்கவோ, தொழில்களை நடத்தவோ ஆரம்பம் செய்வார்கள். ஐந்து அல்லது ஆறு வயது நிரம்பிய ஆண் குழந்தைகள் உள்ள வீடுகளில், அன்று அவைகளுக்கு சாஸ்திர விதிப்படி புரோகிதரைக் கொண்டு "ஹரிஹி-ஓம்," என்ற பிரணவத்தைச் சொல்லி, அக்ஷராப்யாஸம் செய்து வைத்து, வேண்டியவர்களுக்கு விருந்தளிப்பார்கள். இப்படியெல்லாம் செய்தால் சரஸ்வதியின் பரிபூரண கடாக்ஷம் கிடைக்கப்பெற்று, நமது கல்வியும் கலையும் விருத்தி யடையும் என்ற ஒரு நம்பிக்கை.

சரித்திர சம்பந்தமாகப் பார்ப்போமானால் பிற நாடுகளைவிட இந்தியா ஒரு கலைக் களஞ்சியமாகவும், கல்வியின் பொக்கிஷமாகவும் விளங்கி வந்தது தெரியவரும். நமது தேசத்தில் கலைகளுக்குப் பஞ்சமா? அஜந்தா, எல்லோரா! குகைகளென்ன! ஸ்ரீரங்கம்; ஜம்புகேஸ்வரம்; மதுரை நாயக்கர் மஹால்; மஹாபலிபுரம் முதலிய இடங்களைப்போய் பார்த்துவிட்டு வாருங்கள். சித்திரம் வேண்டுமா? ரவிவர்மா படங்களையும்; சாந்தி நிகேதனச் சித்திரங்களையும் சிந்தித்துப் பாருங்கள். கவிகளுக்குக் குறைவா! கம்பன்-காளிதாசன்-மஹா கவி தாகூர்-சுப்ரமண்ய பாரதி இவர்களின் கவிதைகளைப் பார்த்தாலே போதுமே!

பண்டைகாலத்து பாரத மக்களின் பராக்கிரமம்; காவியம்; ஓவியம்; சிற்பம்; ஔதார்யம்; முதலியன மண்ணோடு மண்ணாய் மறைந்து விட்டன. ஏன்? கவலையுடன் கவனித்து ஆதரிப்பாரில்லை. சுதேச சமஸ்தானங்களிலுள்ள அக் காலத்து அரசர்கள் தங்களது பொக்கிஷத்தைத் திறந்து பணத்தை வாரி இறைத்து, மேற்படி கலை பொக்கிஷங்களைக் காப்பாற்றி வந்தனர். உதாரணமாக, மைசூர்; புதுக்கோட்டை முதலிய சமஸ்தானங்களில் இன்னும் அதன் அம்சமாக ஓரளவு நவராத்திரியின் பொழுது நடை பெறுவதைக் காணலாம். அவ் வரசர்கள் அடிக்கடியும், முக்கியமாக நவராத்திரியாகிய ஒன்பது தினங்களிலும் வித்வத் சபை கூட்டுவார்கள். நாட்டின் நாலா பக்கங்களிலுமுள்ள, புஜபலம் மிக்க மல்லர்கள்; சிற்ப சித்திரக்காரர்கள்; சங்கீத வித்வான்; சாஸ்திரக்ஞர்கள்; பண்டிதர்கள், எல்லோரும் ராஜசபை முன் ஒன்று கூடி, தங்கள் தங்களுக்குள்ள திறமையை வெளிப்படுத்துவார்கள். புதிதாகப் பயின்றவர்கள் அரசர்கள்முன் அரங்கேற்றம் செய்வார்கள். அரசர்களும் அவரவர்களுடைய திறமைக்குத் தகுந்தபடி சன்மானம் செய்து கௌரவித்து அனுப்புவார்கள்.

ஆனால் இப்பொழுது இருக்கும் சமஸ்தானாதிபதிகள் மேல் நாட்டு நாகரீகத்துக்கு அடிமையாகி, முன்னோர்களுடைய பழக்க வழக்கங்களுக்கு இழுக்கைத் தேடி, தமாஷாக்களிலும்; படாடோபத்திலும் மூழ்கி, நவநாகரீகமாய் இருப்பதாய் நினைத்து பணத்தைப் பிரயோஜனப்படுத்தாமல் பாழ்ப் படுத்துகிறார்கள். இதனால் நமது கலைகளும் கல்விகளும் கவனிப்பாரின்றி அழிந்து பட்டதை நினைக்குங்கால் மனம் புழுங்குகிறது.

இக் காலத்தில் மாந்தர்கள் நவராத்திரிப் பண்டிகையை கொண்டாடும் விதத்தைப் பார்த்தால் துக்கம் உண்டாகிறது. ஏன்? இப் பண்டிகை

(160-ம் பக்கம் பார்க்க.)

# காலைத் தேவி



(குரு.)



விடி வெள்ளி வானவெளியில் ஒளிருகின்றது. மேல் மாடியில் வெளியிடத்தில் படுத்திருந்த எனக்குத் தூக்கம் கலைந்து விட்டது. எழுந்து உட்கார்ந்தேன். ஆ! என்ன இனிய காட்சி. கட்டிடங்களின் மீதும் அவற்றை மூடிப் பெருமிதத்துடன் ஓங்கி நிற்கும் மரங்களின் மீதும் திங்கள் தன் பால் நிலவைப் பொழிகின்றது. அமைதி, எங்கும் அமைதி. நகர வாழ்வின் நரகத் தன்மையையெல்லாம் அப்போது காணோம். இயற்கையன்னையின் இனிய ஆட்சி நகரங்களில் நடைபெறும் நேரம் அதுவே போலும். இயற்கையன்னையின் அருமைச் செல்வங்களான பறவைகள் மட்டும் அங்கங்கே கரைய ஆரம்பித்து விட்டன. இயற்கையன்னையைக் கூவிச் செயற்கை வாழ்விலிருந்தும் எம்மைக் 'கா கா' என்று கரைகின்றனபோலும்! வெளிச்சமும் இல்லை; இருட்டும் இல்லை, அப்படிப் பட்ட நேரத்தில் மிக உயரத்திலிருந்து 'மெல்லிய பூங்காற்று' வீர நகரின் காட்சியைக் காண்பது மிக இனிது. அந்த நேரத்தில் ஊதினாற்போல வரும் மெல்லிய தண்ணிய காற்றினைத் துய்க்கும் போதுதான் வள்ளலார் கூறிய 'மெல்லிய பூங்காற்று' என்பதன் பொருள் விளங்குகின்றது. நகர வாழ்வில் இருப்பவனுக்கும் அந்த நேரம் பேரின்பம் கொடுக்கின்றது. அப்போது செல்வனின் கொடுங்கோலாட்சியில்லை; மார்வாடிகளின் மனமற்ற கொடுஞ் செயல்களில்லை. கண்ணைக் கசக்கும் ஏழைக் குழந்தைகளில்லை. உடையின்றி வருந்தும் வறியர்கள் இல்லை. மனிதனுடைய சிற்றறிவின் அறிகுறியாகிய மோட்டார் முதலிய செயற்கைப் பேய்களின் அலறலில்லை. எங்கும் பரந்த இன்பம்! எங்கும் நிறைந்த அமைதி! எப்போதுமே இந்த அருமையான காட்சியிலேயே நிலைத்திருக்கக் கூடாதா?

ஆனால் அதோ, பால்காரன் மாடோட்டும் சத்தம் கேட்கின்றது. இனி இயற்கையன்னை நகரத்திலிருந்து நகரத் தொடங்கி விடுவாள். செயற்கைப் பேயின் அட்டகாசமே நிரம்பிச் செயற்கைப் பேயின் ஆட்சியே ஓங்கி நிற்கும். அமைதியும், அன்பும், அருளும், இன்பமும் அந்த ஆட்சியிலில்லை. எல்லாம் பணம், எல்லாம் பணம். அங்கே அன்பேது, அருளேது; இன்பந் தானேது; எனவே, அமைதி ஏது?

ஏ, தாயே! இந்தச் செயற்கை வாழ்விலிருந்து எங்களுக்குச் சிறிதாயினும் விடுதலை அளிக்கும் உன் தமிழ் மணங் கமழும் சேவடியை வணங்குகின்றோம்.

---

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 16. வெள்ளி உலகும்—பல பாகமும்

இவ்விதம் இன்றைய விஞ்ஞானம் காணுகின்ற 'வெள்ளி' அல்லது 'சுக்ர' அண்டத்தைப் பற்றி 'ஜ்யோதிஷ பல பாகம்' (Predictive Side of Astrology) விவரிக்கும் பலன்களைச் சற்று கவனிப்போம். பல பாக நிர்ணயங்கள் ஆராய்ச்சி அறிவுக்கு ஒத்தவை யென்று குறிப்பிடுவது மிகையாகாது. இவை பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே—ஏன், ஆராய்ச்சிக்காரர்களுடைய கால வரைகளுக் கெல்லாம் முன்பே—மிகப் பழய காலத்து நம் நாட்டுப் பெரியோர்களால் கண்டு வைக்கப் பெற்றவை; அதிலுள்ள பலவும் ருசிகரமானவை;' அத்துடன் அதிகம் உண்மை நிறைந்தவை: இதை உணரும் பொருட்டே விஞ்ஞான எல்லையின் ஆராய்ச்சி விளக்கங்களை முதற்கண் (சென்ற இதழில்) தந்திருக்கின்றோம்.

பலன் தருகின்ற கோள்களுள் (Planets) 'சுக்ரனை' அதி முக்கியம் வாய்ந்ததாக 'பல பாகம்' கருதுகின்றது. ஏனைய கோள்கள் ஒவ்வொன்றும் ஒரோர் எல்லையில் மட்டும் பலனுக்குரியனவாக விருக்கும். ஆனால் சுக்கிரன் மட்டும் எந்த எல்லையிலும் உதயம் முதல் ஒடுக்கம் மட்டும் பலன் தருவதற் குரியதாகக் காணுகின்றனர்.—சிருஷ்டியின் அறிவதற்கரிய இரகஸ்யங்களை வைத்திருப்பது 'சுக்ரப் பேருலகம்' என்கின்றனர். சிருஷ்டி தத்துவங்களில்—அதன் சேர்மைகளில் நெடுகிலும்-எங்கணும்-யாண்டும் அல்லது சேருகின்ற பலன்கள் என்பன அனைத்தும் சுக்ரனால் தான் உண்டாகின்றதாம். பல நிகழ்ச்சி அல்லது பல விருத்திக்கு மூலவித்தாக விருக்கும் 'இச்சை'—இதன் ஆளுகைக்குரியது. எதற்கும் இச்சை தான் மூலமாகும்; இச்சையின்றி எதுவு மில்லையன்றோ! தோற்ற வரையில் மூல வித்தாகவுள்ள இச்சை அதன் ஆளுகையுள் இருத்தலின், சுக்ரப் பேருலகம் எல்லா எல்லைகளிலும் முக்கியத்திற்குரியதாக ஆகிறது. அத்துடன், நிவர்த்தி வரைகளிலும் கூட இதன் நிகரற்ற பல ஆதிக்கம் அதிகம் முக்கியத்துவத்திற் குரியதாக ஆகின்றதென்னலாம்.

ஜலக் கூறு மிகுந்த சுக்ரன் 'நிருதி' என்னும் தென்கிழக்கு திக்கின் ஆதிக்கம் கொண்டது; வெண்ணிறத்துத் திவ்ய தேசு நிறைந்தது. இராஜோ குணம் நிறைந்ததாகப் பிரவர்த்திக்கும்—நிவர்த்திக்கும் பேராதரவாக—நடு நிலைத் தேசு அல்லது அருட்சக்தியாக விளங்குகின்றது.

அவ் வழி, கவர்ச்சி மிக்க சோபை-வசீகரம் நிறைந்த தோற்றம்-எவரும் வரவேற்கும் இணையற்ற செல்வாக்கு—உன்னதமான உயர்ந்த பெருலக்ஷியங்கள்—பரிசுத்தமான சித்த விருத்தி-இடை விடாத உற்சாகம்—ஊக்கம் நிறைந்த நன் மனம்-அபூர்வங்களுக்குரிய புத்திபாக சேர்மைகள்—காலம் மூன்றையும் ஆளும் சக்தி—உயர்தரத்து யோசனை—ஆராய்ச்சி சேர்மை—சமயங்களுக்கேற்ற சீர்திருத்த மனப்பான்மை-நிர்மான முன்ன

முடிவு-கற்றலும்—கற்பித்தலும்—தன்னல மறுப்பு-விடா முயற்சி-மொத்தத்தில் எதிலும் இனிமை நிறைந்த தன்மை முதலியன சுக்ரனின் இயற்பலன்கள் என்ன வேண்டும்.

இவ் இயற்கண் வழி காட்டுவோன்-எதையும் சாதித்துத் தரும் பெற்றியோன்-மந்திரி (அரசு)-உயர் தெய்வக் கவி-நேர்மை உன்னத்து-உன்னத முன்ன கற்பனைக்காரன்-கலாரசிகன்-பாடகன்-நடிகன்-மகிழ்வோன்-மகிழச் செய்வோன்-ஆசாரியன் ஆகிய நிலைகளுக்குரியது சுக்ரன். இன்னும்,

பரிசுத்தம் நிறைந்த தெய்வக் காதல்-உண்மையான அன்பு உருக்கம்-ஐக்கிய பாவம் இவற்றைத் தன் சிறப்பியலிற் கொண்ட சுக்ரனின் பலன்களாக மனோதத்துவம்-கூட்டுறவு—நேயபாவம்—அந்நியோன்னிய நிலை, இணக்கத்தின் எழில் ஆகிய இவற்றைக் கூறலாம். இவ்வழி, முக்கியமாய் எதிர் இனத்து உறவும்-துறவும்—பிறவும் காட்டும்.

உன்முக திருஷ்டியும்-பரிசுத்த விருத்தியும்-தன்னலமற்ற தியாகமும் சுக்ரனின் தனி இயற்களாதலின், உலகு ஒப்பும் அல்லது இனிது வற்கும் பெருமையும்-உண்மையான உணர்வும் இதன் பலன்களாகக் கூறலாம்.

அனுபவம் இரஸனை-இது பொதுவியற்களாதலின், சமதிருஷ்டி—ஆராய்ந்தறியும் அளவில் சக்தி-மதனகலை-தத்துவ ஞானம்-இசை நிருத்த மாதிவற்றின் நேர்மை காணுவது-அவற்றின் முதற்பெரும் காவன் நிலை-உணர்ச்சிகளை அடக்கி ஆளும் பெற்றி நெறி வகுப்பு-வகுத்த நெறிகளை அமுல் நடத்துதல் பாலனம்—இனிய சங்கம்-இன்பகரமுள்ள வைபவங்கள்—ஹாஸ்யச் சுவை-நெறிமிக்க நிலையில் எல்லோராலும், விரும்பப் பெறுதல்-நடத்தைக்குரிய கற்பனைகள்-ஆகியன சுக்ரனின் பலன்களாகக் கூறலாம்.

குறிக்கோள்-லட்சியம் இவற்றின் பலன்களாக களத்திரம் காதத்களம்—காமம்-போகம்-எதிர் இனத்து நேயர்கள் ஆகியன காணுதற்குரியனவாகும். எனினும், பரிசுத்தத்தன்மை-கற்பு—புலன்மறுப்பு-ஜிதேந்திரியத்துவம்-பிரிமசரியம் ஆகிய சிறப்பு மிகுந்த பெருங்குணங்களும் சுக்ரனது பலனாக வருகின்றன.

இவ்வழி மதனுதிக்கம்-காதல் தொடர்பு-எதிர் இனத்து உறவுகளின் தன்மை-மனோ உல்லாசம் இவை சுக்ரனின் இராஜ்யமாய் அந்தப் பலன்களில் மனோகரம் மிக்க காட்சிகள்-கவர்ச்சிக்குரிய நிலைகள்-இயற்கை வனப்புக்கள் ஆகியன வரும். இன்னும், அவற்றுக்கேற்ற அணி அலங்காரப் பொருள்கள்-பணிதி பாத்திரங்கள்-தனவாடங்கள் மாடமாளிகைகள்-மலர்களைகள்.—கட்டில் மெத்தைகள் வாகனாதிகள்.—நாற்கால் ஜந்துக்கள்-பொதுமகளிர் முதலியனவும் கூறலாம்.

கலைகளில் கதை-காவியங்களும்-கற்பனைக் கவிதைகளும்-யாப்பு அணிகளும் இசை நிருத்தங்களும்-நடிப்புகளும்-ஹாஸ்யம் சிருங்காரம் ஆகிய ரஸங்களும் சுக்ரனுக்கு உரித்தாக வுள்ளனவாம்.

ஒளியில் கோள்கள் யாவற்றினும் மிகுத்ததாகலின், வெள்ளி இதன் உலோகமாகவும்-வைரம் இதன் இரத்தினமாகவும் கொள்கின்றனர். ஜலம்

கூறு நிறைந்த தாலையால் சுக்லம்—அதன் வீர்யம்-தேஜஸ் ஆகியன சுக்ரனின் ஆதிக்கத்தில் அமைவன வென்பர்.

நிவர்த்தி எல்லையில் உயர்தரமான வெற்றிகளுக்கு உரியது; சிருஷ்டியின் இரகசியங்களை ஒருவர் உணரும்படி செய்து அவ்வகையே உன்னதங்களுக்கு வழி நடத்துவதில் நிகரற்றது சுக்ரன்.

இவ்விதம் பலன்களிற் சிறந்த சுக்ரன் பலன் நிகழ்த்துவதில் கோள்கள் எல்லாவற்றிலும் மேலான துரித முடையது. அதாவது பல சித்திகளின் அளவு அதீத தரத்திலும்—சித்திகாலம் துரித தரத்திலும் இருக்கும்.

இதன் தனித்த சுபாவமான பலன்களுடன் சேர்க்கைகளில் சேர்ந்த கோள்களின் பலன்களும் கூடிச் சிறக்கவும் கூடும். அதைக் காணும் முன் சுக்ரனின் பலன்களின் சிறப்புக்களுக்குரிய எல்லையை வரையறுத்தே தெரிவது முக்கிய மாகும். அந்த எல்லைகள் ஒரு கிரகத்தின் பலன்களை அளவிட்டுக் கண்டு கொள்வதற்கு உதவியாக விருப்பனவென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். இதை 'ஸ்திதி பலம்' என்று 'பல பாகம்' குறிப்பிடுகிறது. பல பாக நிர்ணயத்திற்கு முக்கியமான அதனை அடுத்த இதழில் விவரிப்போம்.



(156-ம் பக்கம் தொடர்ச்சி.)

யாகிய நவராத்திரி நவநாகரீக நாரீமணிகளுக் குரியதாய் போய் விட்டது. அதன் புனிதத் தன்மையைப் புறக்கணித்து விட்டார்கள். களிமண் பொம்மையும்; கடலைச் சுண்டது தான் சுண்டலும் பலன்.

தங்களிடமுள்ள செல்வத்தை பிறருக்கு எடுத்துக் காட்டுவதற்காக தற்போது பெரும்பாலார் தங்கள் வீடுகளில் 'கொலு' வைத்து வருகிறார்கள்.

இவ்விதம் கலைமகள் திருவிழாவை நடத்துவதை விட்டு, "ஹே! பாரத தேவி! ஹே! பார சக்தி!! உன் தளைகள் தகர்ந்து, இவைகளைப் புனிதமாய்க் கொண்டாடி, பாரதமக்கள் உன்னத மெய்தி, உலகில் தலை நிமிர்ந்து சகல கலைகளிலும் வல்லவராகி "எனது நாடு இந்தியா! "நான் இந்தியன்," என மார்புதட்டிப் பேசுங்காலம் என்றைக்கு வருமோ? கிருபை கூர்ந்து சீக்கிரம் அருள் செய்வாயாக" என்று பிரார்த்தனை செய்தாலும் விமோசனம் ஏற்படும்.

# இல்யாஸ்



லியோ டால்ஸ்டாய்

(கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.)

ஊபா அரசாங்கத்தில், ஒரு காலத்திலே இல்யாஸ் என்ற ஒருவன் வசித்தான். ஒரு பெண்ணைப் பார்த்து அவனுக்கு அவன் தகப்பனார் கல்யாணம் செய்து வைத்தார். அதற்கு ஒரு வருஷத்திற்குப் பின்னால் இறந்த அவர், தம் மகனுக்கு அதிகமான சொத்து ஒன்றையும் வைத்து விட்டுப் போகவில்லை. அப்போது இல்யாஸுக்கு ஏழு பெண் குதிரைகள், இரண்டு பசுக்கள், சுமார் இருபது செம்மறியாடுகள் மாத்திரமே இருந்தன. தன் வீட்டை மேல் பார்த்துக் கொள்வதில் அவன் கெட்டிக்காரன். எப்படியோ, வெகு சீக்கிரத்தில் அவன் மேலும் மேலும் சம்பாதிக்க ஆரம்பித்தான். அவனும் அவன் மனைவியும் காலையிலிருந்து இரவு வரைக்கும் வேலை செய்வார்கள். எல்லோரையும் விட அதிகாலையில் எழுந்திருப்பது, இரவு வெகு நேரங் கழித்து உறங்குவது என்றிருந்தார்கள். அவனுடைய செல்வமும் வருஷத்துக்கு வருஷம் பெருகிக்கொண்டே வந்தது. இம் மாதிரியே காலத்தைக் கழித்துக் கொண்டே இல்யாஸ் கொஞ்சம் கொஞ்சமாக நிறையப் பணம் சேர்த்து விட்டான். முப்பத்து ஐந்தாம் வருஷக் கடைசியில் அவனுக்கு 200 குதிரைகளும், 150 மாடுகளும், 1200 செம்மறியாடுகளும் இருந்தன. கூலி வேலைக்காரர்கள் அவனுடைய ஆடுமாடுகளைக் கவனித்துக் கொண்டார்கள். கூலிப் பெண்கள் பெண் குதிரைகள், பசுக்கள் ஆகியவற்றைக் கறந்து குமிஸ்* வெண்ணெய் பாலடைக் கட்டி முதலியன செய்வார்கள். இல்யாஸுக்கு எல்லாம் ஏராளமாக இருந்தன. அந்த ஜில்லாவிலிருந்த ஒவ்வொருவனும் அவன் மீது பொறாமை கொண்டான். அவனைப் பற்றி, "இல்யாஸ் ஒரு அதிர்ஷ்டக்காரன்; அவனுக்கு சகலமும் இருக்கின்றன. உலக வாழ்க்கை அவனுக்குச் சந்தோஷகரமாக இருக்கும்" என்று சொல்லிக் கொள்வார்கள்.

உயர்ந்த அந்தஸ்திலிருக்கும் ஜனங்கள் கூட அவனைப் பற்றிக் கேள்விப்பட்டார்கள். அவனுடைய அறிமுகத்தையும் சம்பாதித்துக் கொண்டார்கள். வெகு தூரத்திலிருந்தும் அவன் வீட்டுக்கு விருந்தினர்கள் வருவார்கள். அவன் ஒவ்வொருவரையும் வரவேற்று உணவும் பானமும் அளிப்பான். யார் வந்தாலும், அவர்களுக்குக் கொடுக்க அங்கே குமிஸ், தேநீர், சர்பத், மாமிசம் முதலியவை எப்போதும் இருக்கும். விருந்தினர் வரும் போதெல்லாம் ஒரு செம்மறியாட்டைக் கொன்று அதன் மாமிசத்தினால் விருந்து செய்வான். சில சமயங்களில் இரண்டும் கொல்லப்படும். அநேகம் பேர் வந்து விட்டால் அவன் பெண் குதிரையைக் கூட விருந்துக்காகக் கொன்று விடுவான்.

இல்யாஸுக்கு இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணுமாக மூன்று குழந்தைகள் உண்டு. அவர்கள் எல்லோருக்கும் கல்யாணம் செய்து வைத்து விட்டான். இல்யாஸ் ஏழையாக இருந்த போது அவன் புதல்வர்கள் அவ

குதிரைப் பாலிலிருந்து தயாரிக்கும் ஒருவித பானம்.

னுடன் வேலை செய்வார்கள். அவர்களே ஆடுமாடுகளைப் பராமரித்துக் கொண்டார்கள். ஆனால் இல்யாஸ் பணக்காரனான பின் அவர்கள் கெட்டுப் போனார்கள். அவர்களில் ஒருவன் குடிகாரனாய் விட்டான். மூத்தவன் ஒரு கலகத்தில் கொல்லப்பட்டு இறந்தான். ஒரு பிடிவாதக் காரியை மணந்துகொண்ட இளையவன் தன் தகப்பனாருக்குக் கீழ்ப்படிய மறந்து விட்டான். பின்னால், கொஞ்சகாலம் கூட அவர்களால் ஒன்று சேர்ந்து வசிக்க முடியவில்லை.

ஆதலால் அவர்கள் பாகம் பிரித்துக் கொண்டார்கள். இல்யாஸ் தன் மகனுக்கு ஒரு வீட்டையும் கொஞ்சம் மாடுகளையும் கொடுத்தான். இதனால் அவனுடைய ஆஸ்தி குறைந்தது. இதற்குப் பின்னால் கொஞ்ச காலத்திற்குள்ளாகவே இல்யாஸின் செம்மறியாடுகளுக்கு ஒரு நோய் வந்து அநேகம் செத்துப் போய் விட்டன. விளைச்சலிலும் பலனில்லை. அந்த வருஷம் குளிர்காலத்தில் அநேக மாடுகள் செத்துப் போயின. கிர்ஜிஸ்-கள் அவனுடைய நல்ல குதிரைகளைக் காப்பாற்றிக் கொண்டான். இல்யாஸினுடைய சொத்து குறைந்து போய் விட்டது. அது நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வர அவனுடைய சக்தியும் குன்றி விட்டது; அவனுக்கு எழுபது வயது ஆகும் மட்டும், ஆட்டுத் தோல்களையும் ஜமக்காளங்களையும், சேணங்களையும் கூடாரங்களையும் விற்றுக் கொண்டே இருந்தான். கடைசியில் மீதி இருந்த மாடுகளையும் அவன் விற்கவேண்டி வந்தது. தன்னையறியாமலே தரித்திரனாகி, தான் எல்லாவற்றையும் இழந்து விட்டதை உணர்ந்தான். வயது சென்ற பருவத்தில் அவனும் அவன் மனைவியும் யாருக்காவது ஊழியம் செய்து பிழைக்கும்படி ஆயிற்று. இல்யாஸுக்கு அவன் தரித்திருந்த உடைகளும், ரோமத்தால் செய்யப்பட்ட ஒரு அங்கியும், ஒரு கோப்பையும், வீட்டுக்குள்ளே போட்டுக் கொள்ளும் மிதியடிகளும், ஜோடுகளும், தன் மனைவி ஷாம்—ஷேமாகியும் தான் மிச்சம். அவளும் இப்போது கிழவியாகி விட்டாள். அவர்களிடம் பாசம் செய்து கொண்ட மகன் தூர தேசத்துக்குப் போய் விட்டான். மகள் இறந்து போனாள். ஆகவே அந்த இரண்டு வயோதிகர்களுக்கும் உதவிசெய்ய ஒருவரும் இல்லை.

அவர்களுடைய அண்டை வீட்டுக் காரன் முகமதுஷா அவர்கள் மீது இரக்கம் கொண்டான். முகமது ஷா பணக்காரனும் அல்ல, ஏழையும் அல்ல. ஆனால் சௌகரியமாய் வசித்து வந்தான். நல்ல மனுஷன். இல்யாஸினுடைய பழைய உபசாரத்தை நினைத்துப் பார்த்தான். அவன்மேல் இரக்கபபட்டு, "இல்யாஸ், நீயும் உன் வயது சென்ற மனைவியும் என்னோடு வந்து வசியுங்கள். கோடையில் என் வெள்ளரித் தோட்டத்தில் உன் சக்திக்குத் தக்கபடி வேலை செய்யலாம். குளிர் காலத்தில் என் மாடுகளைப் பராமரித்துக் கொள். ஷாம்-ஷேமாகி குதிரைப் பாலைக் கறந்து குமிஸ் தயார் செய்யட்டும். உங்கள் இருவருக்கும் உணவும் உடையும் கொடுக்கிறேன். உங்களுக்கு ஏதாவது வேண்டியிருந்தால் என்னிடம் கேட்டு வாங்கிக் கொள்ளுங்கள்" என்று சொன்னான்.

இல்யாஸ் அவனுக்கு வணக்கம் செலுத்தினான். அவனும் அவன் மனைவியும் தொழிலாளிகளைப் போல் முகமது ஷாவிடம் வேலைக்கு அமர்ந்து கொண்டார்கள். அந்த வாழ்க்கை முதலில் அவர்களுக்குக் கஷ்டமா

கத் தோன்றியது. ஆனால் அது அவர்களுக்கு வழக்கமாய்ப் போனபின் தங்களுக்கு இயன்ற மட்டும் வேலை செய்து வாழ்ந்து வந்தார்கள்.

இப்படிப்பட்டவர்கள் தன்னிடம் இருப்பதை முகமது ஷா லாபகரமானதாகக் கருதினான். ஏனென்றால், அவர்களே எஜமானர்களாய் இருந்திருக்கிறபடியால், அவர்களுக்கு எப்படிப் பரிபாலித்துக் கொள்ள வேண்டும் என்று தெரியும். அவர்கள் சோம்பேறித் தனமின்றி முடிந்த மட்டும் எல்லா வேலையையும் செய்தார்கள். என்றாலும், உயர்ந்த ஸ்திதியில் இருந்தவர்கள் இப்படித் தாழ்ந்து போனதைக் காண முகமது ஷாவுக்கு வருத்தமாகத்தான் இருந்தது.

ஒரு சமயம் முகமது ஷாவினுடைய சில உறவினர்கள் வெகு தூரத்திலிருந்து அவனிடம் விருந்தினராக வந்தார்கள். ஒரு முல்லாவும் (முஸ்லீம் சாஸ்திரி) வந்திருந்தார். முகமதுஷா, இல்யாஸிடம் ஒரு செம்மறியாட்டைப் பிடித்துக் கொல்லச் சொன்னான். இல்யாஸ் ஆட்டை உரித்து அதைக் கறி சமைத்து விருந்தினருக்கு இட்டான். விருந்தினர் மாமிசத்தைப் புசித்தபின் கொஞ்சம் தேநீர் அருந்திக் கொண்டார்கள். பிறகு குமிஸ் பருகத் தொடங்கினர். அவர்கள் ஜமக்காளத்தின் மேல் இடப்பட்ட மெத்தைகள் மீது முகமது ஷாவோடு உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டும், கோப்பைகளிலிருந்து குமிஸைச் சுவைத்துக் கொண்டும் இருக்கும்போது, இல்யாஸ் தன் வேலையை முடித்து விட்டு திறந்திருந்த வாசல் வழியாக வெளியே போனான். முகமதுஷா அவன் போனதைக் கண்டு விருந்தினர் ஒருவரிடம், "இப்போது வெளியே போன கிழவனைக் கவனித்தீர்களா?" என்று கேட்டான்.

"ஆம், அவனிடம் கவனிக்க வேண்டிய விசேஷம் என்ன இருக்கிறது?" என்று கேட்டார் அந்த விருந்தாளி.

"இதே தான்-நம்மிடையே அவன் ஒரு காலத்தில் பெரும் பணக்காரனாய் இருந்தான். அவன் பெயர் இல்யாஸ். நீங்களும் அவனைப் பற்றிக் கேள்விப்பட் டிருக்கலாம்" என்று முகமதுஷா சொன்னான்.

"ஆமாம். அவனைப்பற்றி நான் கேள்விப்பட் டிருக்கிறேன். அவனை இதற்கு முன்னால் எப்போதும் பார்த்தது கிடையாது. ஆனால் அவன் புகழ் எங்கும் விரிந்து பரந்திருந்தது"

"ஆனால் இப்போது அவனுக்கு ஒன்றும் கிடையாது. அவன் ஒரு வேலைக்காரனாக என்னோடு வசிக்கிறான். அவனுடைய வயதான மனைவியும் இங்கே தான் இருக்கிறாள்-அவள் குதிரைகளிடம் பால் கறப்பாள்."

விருந்தாளி ஆச்சரியப்பட்டுப் போனார். அவர் வாய்க்குள்ளேயே 'ச்சோ ச்சோ' என்று சொல்லி தலையை அசைத்துக் கொண்டே சொன்னார்: "அதிர்ஷ்டம் சக்கரம் மாதிரி சுழன்று கொண்டே இருக்கிறது. அது ஒருவனைத் தூக்கி விடுகிறது; மற்றொருவனைத் தாழ்த்தி விடுகிறது! எல்லாவற்றையும் இழந்ததை நினைத்து இந்தக் கிழவன் வருந்துகிறது இல்லையா?"

"யார் சொல்ல முடியும்? அவன் சாந்தமாகவும், மனச் சமாதான மோடும் வசிக்கிறான்; நன்றாகவே வேலை செய்கிறான்."

"நான் அவனோடு பேசலாமா? அவன் வாழ்க்கையைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன்" என்றார் விருந்தாளி.

"ஏன் கூடாது?" என்று சொல்லிவிட்டு அங்கிருந்தபடியே, "இல்யாஸ், உள்ளே வந்து எங்களோடு ஒரு கோப்பை குமிஸ் சாப்பிடு. உன் மனைவியையும் இங்கே கூப்பிடு" என்றான் முகமதுஷா.

இல்யாஸ் தன் மனைவியோடு உள்ளே நுழைந்தான்; தன் எஜமானனோடும், விருந்தினர்களோடும் பரஸ்பரம் ஆசீர்வாதங்களைப் பரிமாறிக் கொண்ட பின், பிரார்த்தனையை முடித்து விட்டு கதவுப்பக்கம் போய் உட்கார்ந்து கொண்டான். அவனுடைய மனைவி, திரைக்கு மறைவிலேயே சென்று தன் எஜமானியோடு உட்கார்ந்தாள்.

இல்யாஸுக்கு ஒரு கோப்பை குமிஸ் கொடுத்தார்கள்; அவன் விருந்தினரையும், தன் எஜமானனையும் வாழ்த்திவிட்டு கொஞ்சம் குடித்துக் கொண்டபின் கோப்பையைக் கீழே வைத்தான்.

இல்யாஸோடு பேச விரும்பிய விருந்தாளி, "தாத்தா, எங்களைப் பார்க்கும்போது பழைய செல்வமும் தற்போதைய துயரமும் உனக்கு ஞாபகம் வரும், வருத்தப்படுவாய் என்று நினைக்கிறேன்" என்றார்.

இல்யாஸ் புன்னகை செய்து விட்டுச் சொன்னான்:

"உங்களுக்கு நான் சந்தோஷம் என்பது என்ன, துரதிர்ஷ்டம் என்பது என்ன என்று சொன்னால் நம்பமாட்டீர்கள். நீங்கள் என் மனைவியைக் கேட்டால ரொம்ப நல்லது. அவள் பெண். மனதிலுள்ளதை அப்படியே சொல்லி விடுவாள். உண்மை முழுவதையும் அவள் உங்களுக்குச் சொல்வாள்."

விருந்தாளி திரைப்பக்கம் திரும்பிப் பார்த்தார்.

"நல்லது. பாட்டி, இப்போதைய துரதிர்ஷ்டத்தை நினைக்கும்போது பழைய சந்தோஷம் எப்படி இருக்கிறது என்று சொல்" என்று பலமாகச் சொன்னார்.

திரைக்குப் பின்னால் இருந்து கொண்டே ஷாம்-ஷேமாகி பதில் சொன்னாள்.

"அதைப்பற்றி நான் நினைப்பது இது தான்: என் கணவரும் நானும் ஐம்பது வருஷங்களாகச் சந்தோஷத்தைத் தேடிக் கொண்டே வாழ்க்கையைக் கடத்தினோம். ஆனால் அதைப் பெறவில்லை; இப்பொழுது தான் கடந்த இரண்டு வருஷங்களாக, எங்களுக்கென்று ஒன்றும் இல்லாமல், வேலைக்காரர்களைப் போல் வாழ்க்கை நடத்தும்போது உண்மையான சந்தோஷத்தைப் பெற்றுக் கொண்டோம். இப்போதைய எங்கள் நிலையை விட விசேஷமான எதையும் நாங்கள் விரும்பவில்லை."

விருந்தினர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். எஜமானனும் ஆச்சரியப் பட்டுப் போனான்; மேலும், அவன் எழுந்து போய் அந்தக் கிழவியின் முகத்தைப் பார்ப்பதற்காக திரையைப் பின்னுக்கு இழுத்து விட்டான். அங்கே அவள் கைகளை மடக்கிக்கொண்டு தன் புருஷனைப் பார்த்து புன்னகை செய்து கொண்டு நின்றாள். அவளுடைய புருஷனும் பதிலுக்குப் புன்னகை செய்தான். கிழவி மேலும்,

"நான் உண்மையைச் சொல்லுகிறேன். விளையாட்டாகப் பேசவில்லை. ஐம்பது வருஷங்களாக ஆனந்தத்தைத் தேடினோம். நாங்கள் பணக்காரராய் இருந்தவரைக்கும் அதைக் காண முடியவில்லை. இப்போது எங்களுக்கு ஒரு ஐவேஜியும் கிடையாது. தொழிலாளிகளைப் போன்று வேலையில் அமர்ந்திருக்கிறோம். அதிக சந்தோஷத்தை அடைந்திருக்கிறோம். இன்னும் விசேஷமாக எங்களுக்கு வேண்டியது ஒன்றும் இல்லை."

"ஆனால் உங்கள் சந்தோஷம் எதில் அடங்கி யிருக்கிறது?" என்று விருந்தாளி கேட்டார்.

"ஏன்? இதில் தான். நாங்கள் செல்வமாக வாழ்ந்தபோது என் கணவருக்கும் எனக்கும் பல ஜோலிகள் இருக்கும். அதனால் ஒருவரோடு ஒருவர் பேசவோ, எங்கள் ஆத்மாக்களைப் பற்றிச் சிந்திக்கவோ, கடவுளை வணங்கவோ நேரம் கிடையாது. அப்போது விருந்தினர்கள் வருவார்கள். அவர்களுக்கு எந்த உணவை விருந்திடுவது, நம்மைப் பற்றி அவர்கள் குறை பேசாதிருக்க என்ன பரிசளிப்பது என்றெல்லாம் யோசிக்க வேண்டி யிருக்கும். அவர்கள் போனதற்கு அப்புறம், நாங்கள் சரியான படி வேலை வாங்க நினைத்திருக்கும்போது, வேலையை நீட்டி விட்டு நல்ல சாப்பாட்டை நினைத்துக் கிடக்கும் வேலைக்காரர்களைக் கவனித்துக்கொள்ள வேண்டும். ஆகவே நாங்கள் பாவம் செய்தவர்களானோம். பிறகு, குதிரைக் குட்டியையாவது, பசுவின் கன்றையாவது ஏதாவது ஒரு நாய் கொன்றுவிடக் கூடாதே என்றும், திருடர்கள் எங்கள் குதிரைகளை அடித்துக்கொண்டு போய்விடக் கூடாதே என்றும் பயத்தோடு இருப்போம். தங்கள் குட்டிகள் மேல் செம்மறியாடுகள் புரண்டு படுத்துவிடக் கூடாதென்று இரவில் விழித்தெழுந்து பார்ப்போம். எல்லாம் சரியாக இருக்கிறதா என்று கவனித்துக்கொள்ள மாறி மாறி எழுந்திருப்போம். ஒரு கவலை தீர்ந்தது என்றிருந்தால் வேறொன்று முளைத்து விடும். அதாவது குளிர்காலத்தில் மாடுகளுக்குப் போதுமான தீவனம் சேர்ப்பது எப்படி என்ற கவலை. இதெல்லாம போக, எனக்கும் என் வீட்டுக்காரருக்கும் ஒத்துப் போகாது. அவர் இப்படி இப்படி காரியங்களைச்செய்யவேண்டும் என்று சொல்வார். என் அபிப்பிராயம் அதனின்றும் வேறுபட்டதாய் இருக்கும். பிறகு நாங்கள் வாதாடுவோம்—பழையபடியும் பாவம் செய்வது தான். ஆகவே, நாங்கள் ஒரு தொந்தரவிலிருந்து இன்னொன்றுக்கும், ஒரு பாவத்திலிருந்து வேறொன்றுக்கும் பிரவேசித்த வண்ணமாய் இருந்தோம். சந்தோஷத்தைக் காண வில்லை"

"நல்லது. இப்பொழுது?"

"இப்பொழுது, என் கணவரும் நானும் காலையில் எழுந்திருக்கிறோம். அப்போதும் ஒருவருக்கொருவர் அன்போடு பேசிக் கொள்ளுகிறோம். சண்டை போடக் காரணம் ஒன்றும் இல்லாததால் அமைதியோடு வாழ்கிறோம். எங்கள் சக்திக்கு இயைந்த மட்டில் வேலை செய்கிறோம். அதை எங்கள் எஜமானர் எங்களால் நஷ்டமடையாமல் லாபம் அடையும்படியாக மனதோடு செய்கிறோம். நாங்கள் வீட்டுக்கு வரும்போது உண்ண உணவும், பருகுவதற்குக் குமிஸ்-ம் தயாராய் இருக்கின்றன. அது ஆறிப்போனால் சூடாக்க எங்களுக்கு விறகு இருக்கிறது. நாங்கள் ரோமத்தால் நெய்யப்பட்ட அங்கி வைத்திருக்கிறோம். பேசுவதற்கும், ஆத்ம சிந்தனைக்கும், பிரார்த்தனைக்கும் எங்களுக்கு நேரம் இருக்கிறது. ஐம்பது வருஷங்களாகச் சந்தோஷத்தைத் தேடினோம். ஆனால், கடைசியில் இப்போது தான் அதைப் பெற்றிருக்கிறோம்."

விருந்தினர்கள் சிரித்தார்கள்.

ஆனால் இல்யாஸ் சொன்னான்:

"நண்பர்களே, சிரிக்காதீர்கள். சிரிப்பதற்கு இது விஷயமல்ல—இது வாழ்க்கையின் உண்மை. நாங்களும் ஆரம்பத்தில் முட்டாள் தனமாக இருந்தோம். செல்வம் போய் விட்டதற்காக அழுதோம்; ஆனால் இப்போது, கடவுள் எங்களுக்கு உண்மையைக் காட்டி விட்டார். அதை நாங்கள் சொல்லுகிறோம். அப்படிச் சொல்வது எங்கள் மனச் சாந்திக்காக அல்ல; ஆனால் உங்கள் நன்மைக்காக."

முல்லா, "இது விவேகமான பேச்சு. சரியான உண்மையை இல்யாஸ் சொன்னான். இதே தான் வேதத்திலும் கூறப்பட்டிருக்கிறது" என்று சொன்னர்.

விருந்தினர் சிரிப்பதை நிறுத்திவிட்டு சிந்தனையில் ஆழ்ந்தனர்.



# ஆலிவர் கோல்டு ஸ்மித்

(Oliver Goldsmith. 1728-1774)

(த. மா. அப்பாவு.)

சில இலக்கிய எழுத்தாளர்கள் திடீரென இலக்கிய உலகிற் குதித்து சில நாள் பிரகாசித்திருந்து விட்டுப் பின்னர் மறைந்து விடுகின்றனர். மற்றையோர் படிப்படியாக புகழெய்தி அப் புகழ் அழியாத நிலையிலே என்றும் வாழ்கின்றனர். கோல்டு ஸ்மித் பின் சொல்லப்பட்ட பிரிவைச் சார்ந்தவர். முதலிலே எதிரிகளால் 'உணர்ச்சியுள்ள அசடன்' என்றழைக்கப்பட்டார். ஒருவர் தமாஷாக எழுதினர், 'அவருடைய எழுத்திலே தேவகளை சொட்டுகிறது, முகத்திலே அசடு வழிகிறது' என்று. ஆனால் சிறிது காலத்திற்குள் மக்கள் இவரது உண்மையான திறனை யுணர்ந்து கருத்து மலிந்த கவிதை எழுதும் கவிஞனாகவும், நளினமிக்க நாடகாசிரியனாகவும், நலந்தரும் நாவல் வரைவோனாகவும் பிரபல எழுத்தாளனாகவும் போற்றத் தொடங்கினர். 'பிரயாணி,' 'அவள் வெற்றிபுறவே பணிகிறாள்,' 'வேக்பீல்டு பாதிரியார்,' 'இவ் வுலகவாசி' என்பன அவருக்கு புகழென்னும் வெற்றி தேடித்தந்த நான்கு படைகள். அக் காலத்தில் புகழெய்தி யிருந்த டாக்டர் ஜான்ஸன் இவரைப்பற்றி எழுதுகையில், 'அவரது எழுத்து நடை அழகானதாகவும், அறிவூட்டக் கூடியதாயும், விளக்கமாகவும் விரும்பத் தக்கதாகவும் இருந்தது' எனக் குறிப்பிடுகிறார். கோல்டு ஸ்மித் இறந்த பின்னரே அவரது எதிரிகள் அவரது உண்மையான உயர்வினையறிந்து போற்றுவாராயினர். புலவர்களை வருத்தம் வறுமை நோய் இவரையும் பற்றி வருத்தியது. இவரது வாழ்க்கை மிகவும் ரஸமானது.

கோல்டு ஸ்மித்தின் தந்தை அயர்லாந்து தேசத்திலுள்ள பாலஸ் மூர் என்னும் நகரில் பாதிரியாக இருந்தவர். அவரது குணங்களை 'வேக்பீல்டு பாதிரி'யில் படம் பிடித்துக் காட்டப்பட் டிருக்கிறது. கல்வி கற்கும் வயதடைந்த கோல்டு ஸ்மித், எலிஜபெத் டிலாப் என்னும் ஆசிரியை யிடம் பாடங் கேட்க அனுப்பப் பட்டான். அவள் இவனை 'வழிப்படுத்தக் கூடாத முட்டாள்' என்று கூறியனுப்பி விட்டாள். பின்னர் தாமஸ் பைரன் (Thomas Byrne) என்னும் ஆசிரியரிடம் அனுப்பப்பட்டான். அவர் ஓர் பழைய போர் வீரன். போரைப் பற்றிய வீரக்கதைகளை பிள்ளைகளுக்குக் கூறி அவர்களது அறிவை வளர்த்தார். அங்கு நாட்டுப் பாடல்களையும் இன்னிசை கானங்களையும் கேட்ட கோல்டு ஸ்மித் முதலாவதாக கவிதை எழுத முயன்றான். அவனது மற்றைய கல்வி நாட்களை பேட்ரி ஹக்ஸ் என்பவரிடம் கழித்தான். இக் காலத்தில் நடந்த சம்பவங்கள் தான் 'அவள் வெற்றியுறவே பணிகிறாள்' என்னும் நாடகத்தில் பரிணமிக்கிறது.

1744-ம் ஆண்டு டப்ளினிலுள்ள டிரினிடி காலேஜில் ஸைஸர் (Sizar—கல்லூரி மாணவர்களுக்கு ஊழியம் செய்து கல்வி கற்போர்) ஆகச் சேர்ந்தான். சில காலத்திற்குப் பின்னர் கல்லூரி மாணவர்களில் ஒருவனாகி விட்டான். ஒரு நாள் தன்னுடைய விடுதியிலே நண்பர்களுடன் ஓர் தமாஷ் காட்சி நடத்தியதால் நீக்கப்பட்டான். சிறிது காலம் வறுமையில் உழன்ற பின்னர் மீண்டும் கல்லூரியில் சேர்ந்து 1749-ம் ஆண்டு B. A. பட்

டம் பெற்றான். அங்கு ஓர் பலகையின் மீது தன்னுடைய பெயரைக் கீற்றி யிருக்கிறான். அது இன்னும் காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கிறது

அவனது தந்தை இறந்து விட்டதனால் அவனது தாயால் வேலையற்ற தன் மகனைக் காப்பாற்ற முடியவில்லை. அவனை ஏதாவதொரு வேலைக்குச் செல்லும்படி அவன் மாமன் தொந்தரவு செய்து கொண்டிருந்தார். அவன் ஓர் பாதிரியிடம் வேலைக்காகச் சென்றபோது, அவனது உயர்ந்த உடையைக் கண்ட பாதிரி அவனை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். மாமன் அவனை ஆசிரியர் வேலைக்கு அனுப்பினார். இதில் விருப்பங் கொள்ளாத கோல்டுஸ்மித் 'கார்க்'நகரில் தன்னுடைய குதிரையை விற்றதால் கிடைத்த பணத்தைக்கொண்டு அமெரிக்கா செல்லப் பயணமானார். கப்பல் தவறி விட்டதினால் சில காலம் ஊர் சுற்றியலைந்த பின் வீடு திரும்பினான். லண்டன் சென்று நியாயவாதி (Lawyer) தொழில் செய்யும்படி கூறி 50 பொன்னுடன் அவனை அனுப்பினார். டப்ளின் நகர கேளிக்கை விடுதிகளில் அப் பணத்தை செலவிட்டு விட்டு வெறுங் கையுடன் வீடு திரும்பினான். பின்னர் அவன் எடின்பரோவுக்கு மருத்துவம் பயில அனுப்பப்பட்டான். அங்கு அவன் தன்னுடைய பாடங்களை விட உடையிலும் கேளிக்கையிலுமே அதிக கவனம் செலுத்தினான். 1755-ம் ஆண்டு கால் நடையாக 'பையில் ஒரு கினி (தங்க நாணயம்), கையில் ஒரு குழல், மெய்யில் ஓர் ஆடை'யுடன் தன்னுடைய பெரிய ஐரோப்பிய சுற்றுப் பிரயாணத்தைத் தொடங்கினான். ஓர் ஆண்டு பிரான்ஸ், ஜர்மனி, ஸ்விட்ஸர்லாந்து, இத்தாலி முதலிய தேசங்களில் சுற்றியலைந்து பிரசங்கங்கள் மூலமும் குழல் வாசித்தும் வாழ்வு நடத்திய பின்னர் இங்கிலாந்துக்குத் திரும்பினான்.

பின்னர் கோல்டுஸ்மித் செய்யாத வேலையில்லை. நாடோடி நடிகனாகவும், மருத்துவனொருவனுக்கு உதவியாளனாகவும், சிறிது காலம் மருத்துவனாகவும், அச்சகத்தில் திருத்துவோனாகவும், நாடக கோஷ்டியொன்றிற்கு ஆசிரியனாகவும், கல்வி பயிலுமிடமொன்றில் ஓர் வேலையில் சிறிது நாளும், பத்திரிகாலயம் ஒன்றில் எழுத்தாளனாகவும் இருந்திருக்கிறான். கடைசியாக கோரமாண்டலில் ஓர் மருத்துவ (Physician and surgeon) வேலையடைய முயன்றபோது 'லாயக்'கில்லை யென நிராகரிக்கப்பட்டான். அவனது மீதியான வாழ்நாள் பூராவும் இலக்கிய உலகில் பெரும் புகழுடன் கழிந்தது.

அவனது முதற் பிரசுரம் 'ஐரோப்பிய கல்வியைப் பற்றிய ஆராய்ச்சி' யாகும். இது மக்களிடம் நல்வரவு பெற்று கோல்டுஸ்மித்தை மீண்டும் எழுதத் தூண்டிற்று. பலவிதமான கட்டுரைகளை 'தேனீ' என்ற பெயருடன் வெளியிட்டான். அக்காலத்திய சஞ்சிகை பலவற்றில் அவனுடைய கட்டுரைகள் வெளிவந்தன. 'பொது மக்கள் பேரேடு' (The public ledger) என்ற சஞ்சிகையில் அவன் எழுதிய சீனக்காரனின் கடிதங்கள் பின்னர் 'இவ்வுலக வாசி' (Citizen of the world) என்ற பெயருடன் தொகுத்து வெளியிடப்பட்டது. இது பொது மக்களின் நன் மதிப்பை வாங்கித் தந்தது. பின்னர் 'இங்கிலாந்தின் சரித்திரம்' முதலான நூல்களை வெளியிட்டான். 1764-ம் ஆண்டு முதலாவதாக அவன் பிரயாணி (The traveller) என்ற நீண்ட கவிதையைப் பிரசுரித்தான். "ஐரோப்பாவில் ஒவ்வொரு சிற்றூரிலும் ஒவ்வொரு மாளிகையிலும் இடம் பெற்ற"

வேல்பீல்டு பாதிரி (The vicar of Vakefield) 1766-ல் வெளிவந்தது. ஒரு நாள் கோல்டுஸ்மித் பொருளின்றி வருந்திய காலதது இந்நூலை ஓர் பிரசுரகர்த்தனுக்கு 60 பொன்னுக்கு டாக்டர் ஜான்ஸன் விற்றுப் பணம் தந்தார் என்று சொல்லப்படுகிறது.

'வேக்பீல்டு பாதிரி'யை வெளியிட்டதின் மூலம் கோல்டு ஸ்மித் ஓர் நல்ல எழுத்தாள னென்ற பேரை நிலைக்கச் செய்தான். டாக்டர் ஜான்ஸன் அவனைத் தன் நண்பர் குழாத்துக்கு அறிமுகம் செய்து வைத்தார். இது வரையில் அவன் கவிஞன், கட்டுரையாளன், நாவலாசிரியன் என்ற பேர் வாங்கி யிருக்கிறான். நாடகமும் இயற்றி நற்புகழெய்த வேண்டுமென்னும் நோக்கத்தோடு வெகு சிரமப்பட்டு 'நல்லியலான்' என்னும் நாடகத்தைச் சிருட்டித்தான். இது முந்தைய நாடகங்களிலிருந்து மாறுபட்டிருந்தா லும் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதற்குக் கிடைத்த 400 பொன்களையும் தன்னுடைய அறையை அலங்கரிப்பதில் செலவிட்டான். இந் தப் பணம் செலவழிந்தபின் 'பாழடைந்த கிராமம்' (The deserted village) என்னும் கவிதையை வெளியிட்டான். அது அழகுடன் முற் றுப் பெற்றிருந்தது

கோல்டுஸ்மித் வாழ்நாளின் மீதி நாலாண்டுகளும் வேகமாய்ச் சுழன் றன. 1773-ம் ஆண்டு 'அவள் வெற்றியுறவே பணிகிறாள்' (She stoops to conquer) என்னும் நாடகத்தை வெளியிட்டான். "முந்தியதை விட, அதிக திறமையுடன் எழுதப்பட்டிருந்தது. கதாபாத்திரங்களின் சம் பாஷணை இனிமையாக அமைந்திருந்தது. விலாப்புடைக்க நகைப்பை யுண் டாக்குகிறது" இது பிரசுரமான உடனே நல்ல பேரையும் நல்ல வருவாயை யும் தந்தது. அவன் தனது கடைசிக் கவிதையை முற்றுப்பெற அமைக்கு முன்னரே இறந்து விட்டான்.

1774-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 4-ம் தேதி உடல் நலிவினால் கோல்டு ஸ்மித் இறந்து பட்டான். மனோவியாதியும் அதிகமான வேலையுமே உடல் நலிவிற்குக் காரணம். அக்காலத்திலிருந்த எழுத்தாளர் அனைவரும் அன்று துக்கத்தி லாழ்ந்தனர். இங்கிலாந்து தன் இலக்கிய மைந்தனொரு வனை இழந்துவிட்டது. அவனுடைய உடல் கோவிலிலே புதைக்கப்பட் டது. இரண்டாண்டுகளுக்குப் பின்னர் டாக்டர் ஜான்ஸனால் ஆக்கப்பெற்ற வாக்கியங்க ளடங்கிய நினைவுக்குறி வெஸ்ட்மின்ஸ்டர் மாதா கோவிலில் நடப்பெற்றது.

அவரது இலக்கிய அறிவைப்பற்றிப் பேச வேண்டுமானால் 'காலந் தாழ்ந்து மலர்ந்த பூ' என்றுதான் சொல்லவேண்டும். இலக்கிய உலகிற் பிரவேசிக்கும்போது வயது முப்பது—அதாவது வேலை தேடியலைந்த ஒவ் வொரு முயற்சியிலும் தோல்வி யடைந்த பின்—மருத்துவம், நியாயவாதி, கோவில் ஊழியம், ஆசிரியர் தொழில், நடிகன், குழல் வாசிப்போன்ற முத லிய தொழில்களில் இலக்கிய உலகிற் பதினேழாண்டுகளே கழிக்க முடிந் தது. அக் காலத்தில் தன்னுடைய பழங்கால அனுபவங்களை எல்லாம் தீட்டி யிருக்கிறான். எந்த மனிதனும் இவனைப்போல் தன்னுடைய நூல் களில் தன்னைப்பற்றியே கூறிக் கொண்டதில்லை. அவனுடைய நூல்க ளெல்லாம் அழகான உயர்ந்த நடையிலே, ஹாஸ்யம் ததும்ப எழுதப்பட் டிருந்தன. அவை ஏழைமக்கள் மீது இரக்கங்கொள்ளும் விதத்திலே எழு தப்பட்டிருந்தன.

# குழந்தைக் கல்வி

('கார்த்திகேயன்.')

அன்புள்ள கோமளா! உனக்கு முடங்கல் வரைந்து நெடுநாளாயிற்று. வரையவேண்டும் என்னும் எண்ணம் பன்முறை எழுந்தும் கூடாது போயிற்று. இதற்கு எழுது கருவிகள் விலை யுயர்ந்தமை, யுத்த அபாயத்தை முன்னிட்டு வீட்டில் பட்டின பந்துக்கள் பலரது கூட்டம், அதனால் வேலை மிகுதியும் ஓய்வின்மை முதலான பல காரணந்தான்.

இன்று எல்லோரும் ஆலயத்துக்குச் சென்றனர். அவர் எங்கோ, யாரையோ பார்க்க வேண்டுமென்று போய்விட்டார். இதுதான் தருணம் என எழுதலானேன்.

இந்தமுறை இளஞ்சிறார்க்குக் கல்வி போதிப்பதைக் குறித்துச் சொல்லுகிறேன். நம்மைப்போல் தாய்மைப்பேறு பெற்ற பெண்பாலார்க்கு இது மெத்த அகத்தியம். ஏனெனில் குழந்தைக்கல்வி இளம்பருவத்தே தன் அன்னை பாலன்றோ தொடங்கப் பெறுகின்றது!

முதலாவது குழந்தைகள் உடல்நிலையில் தாய்மார்கள் தம் கருத்தைச் செலுத்தவேண்டும். நல்ல உடலும் போதிய திடமும் பெற்றிருந்தாலல்லது குழந்தைகள் கற்பது எங்ஙனம்? ஆதலால் போதிய உடலுறுதி பெறும் வண்ணம் தாய்மார்கள் கவனிக்கவேண்டும்.

இளங்குழந்தைகளுக்கு எந்நேரமும் உண்பதிலும், தின்பண்டங்களை அடிக்கடி சுவைப்பதிலும் விருப்ப மிருக்கலாம். அதற்காக அவர்கள் வீட்டிலுள்ள தாய்மார்களையோ, தங்களுக்குச் சலுகையுள்ள அத்தை, பாட்டி போன்ற பெரியோர்களையோ துன்பப்படுத்துவர். இதற்கு அஞ்சி சில மாதர்கள் தம் குழந்தைகளுக்கு எப்போதும் உணவுப் பண்டங்களை வழங்கிக்கொண்டே விருப்பர். வேறு சிலர் குழந்தைகள் நன்றாய்த் தின்றால் தானே நல்ல பலசாலிகளாக வளர்வர் என்றெண்ணிக் குழந்தைகளுக்கு அடிக்கடி ஆகாரம் ஏதேனும் அளித்தவண்ண மிருப்பர். இப்படிச் செய்பவர்களே உண்மையில் தங்கள் குழந்தைகளின் வளர்ச்சிக்கும், சுகத்திற்கும் கேடு சூழ்பவர்களாகின்றனர். உணவை மிதமிஞ்சிக் கொள்வதால் குழந்தைகளின் ஜீரண உறுப்புக்கள் எத்தகைய அல்லலுறும் என்பதை இப்பேதைகள் உணர்வதில்லை. கோமளா! குழந்தைகள் நேரமின்றி, ஒழுங்கின்றி உண்பதால் அவர்கள் பற்பல நோய்களுக்காளாகி பெற்றோர்க்கும், மற்றோர்க்கும் பெரிதும் இடர் விளைப்பதை நீ கண்டதில்லையா? சிறுவர் உணவு அவரவர் பருவத்திற்கும், தேக நிலைக்கும் தக்கபடி யிருக்கவேண்டும். அடிக்கடியும், அளவுக்கு மிஞ்சியும் உண்ணக் கொடுப்பது மதியீனம்.

அடுத்தபடியாக சிறுவர்கள் ஓடியாடி விளையாட போதிய இடமிருக்கவேண்டும். வீட்டருகில் அல்லது வீட்டைச் சுற்றியுள்ள தோட்டத்தில் குழந்தைகள் தம் மனம்போல் விளையாடவேண்டும். பள்ளிக்கூடத்தில் கூட அவர்கள் விளையாடுவதற்கான விளையாட்டிடங்கள் கட்டாயமாக வேண்டும் என்பது கல்விச் சட்டங்களில் ஒன்றல்லவா! விளையாட்டில் அவர்கள் உறுப்புக்கள் வலுவடைகின்றன. எலும்பும், தசையும் வளர்ச்சி

யும் உறுதியும் பெறுகின்றன. உடலோடு உள்ளமும் உரம்பெற்று அவர்களைச் சுறுசுறுப்புள்ளவர்களாயும், ஆரோக்கிய முள்ளவர்களாயும் செய்கின்றது.

குழந்தைகள் விளையாடுவதற்கென்று அவர்கள் கையாளும் பொருள்கள் என்னென்ன வென்பதையும் பெற்றோர் கண்காணிப்ப தவசியமாகும். சில தாய்மார்கள் தங்கள் குழந்தைகளது அழுகை, பிடிவாதம் முதலான இயல்புகளைக் கண்டு மனம் நொந்து "இவர்கள் ஏனோ நம்மை இப்படிப் படுத்துகின்றனர்" எனத் தமக்குள்ளே புழுங்குகின்றனர். இத்தகையோர் தங்கள் புதல்வர் எங்கேனும் விளையாடச் சென்றுவிட்டால் நலம்; சற்று நேரமாகிலும் அவர்கள் தொல்லையின்றி நிம்மதியாக விருக்கலாம் எனக் கருதுகின்றனர். இவர்கள் அறியாமைக்குப் பெரிதும் இரங்குகின்றேன்.

உண்டநேரம் போக எங்கேனும் தொலைந்தால் போதும் எனத் தாய்மார்கள் நினைப்பார்களானால் அதைவிடப் பேதைமை வேறொன்றில்லை. குழந்தைகளைக் காத்தல் தம் கடமை என்பதை எந்தத் தாயும் உணர்வாள். எனவே குழந்தைகள் விளையாட்டில் ஈடுபட்டாலும் அவர்கள் மீது கவனம் இருக்கவேண்டும் தாய்மார்களுக்கு. சிறுவர்கள உபயோகிக்கும் விளையாட்டுப் பொருள்களில் எத்தனையோ அபாயகரமானதும் உண்டு. எடுத்துக் காட்டாக ஈண்டு ஒன்றை விவரிக்கிறேன்.

'கிட்டிப்புள்' விளையாட்டு என்று ஒரு விளையாட்டு உண்டு. கிட்டி எனப்படுவது ஒரு முழ நீளத்திலுள்ள சற்று கனத்த கோலாகும். 'புள்' எனப்படுவது உருண்டையான அல்லது சற்று நீண்ட மரக்கட்டையாகும். அந்தப் 'புள்ளை' கிட்டிகொண்டு அடிப்பர். அப்போது அந்தப்புள் நெடுந்தூரம் விரைந்து செல்லும். இந்த விளையாட்டில் அந்தப் 'புள்' சிறுவர்களது கண் முதலான நுட்பமான உறுப்புக்களைத் தாக்கி விடுமானால் அதனால் எத்தகைய அபாய முண்டாகும்? 'கோலெடுத்த பிள்ளை குருடு' எனத் தமிழ்நாட்டில் ஒரு பழமொழியும் உண்டல்லவா?

இன்னும் பார்! தீபாவளிபோது சிறுவர் எத்தனைவிதமான வாணங்களைக் கொளுத்துகின்றனர்! அதனால் உண்டாகும் ஆபத்து என்ன சாதாரணமானதா? எத்தனையோ சிறுவர் 'மண்டை உடைந்தது, பல் போயிற்று, முகம் கருகிற்று,' என அந்த நல்ல தினத்திலே அவர்கள் கொண்டு வரும் செய்தி மனதுக்கு எப்படி யிருக்கும்?

ஆதலால் அபாயமற்ற விளையாட்டுப் பொருள்களை உபயோகிக்குமாறு செய்வது தாய்மார்கள் கடமை யாகும்.

விளையாட்டால் சிறுவர்கள் நல்ல திடம் பெறுவதன்றி, பல உண்மைகளையும் அனுபவத்தால் பெறுகின்றனர். அனுபவத்தில் பெறும் கல்வி இளம் உள்ளத்தில் நன்கு பதியுமல்லவா? இரண்டும் இரண்டும் நான்கு என்று நாம் அவர்களுக்கு போதிப்பதைக் காட்டிலும் அவர்களே விளையாட்டில் தெரிந்துகொள்வது சிறியதன்றோ!

கோமளா! காவிலுக்குச் சென்றிருந்தவர்கள் அதோ வந்துவிட்டார்கள். அடுத்தமுறை தொடர்ந்து எழுதுகிறேன்.

உனது அன்புள்ள சிவகாமி.

# மரண இரவு 

(ஈழத்து-வை. சி. வை.)

(சென்ற மகா யுத்தத்தில் நடந்த ஆகாய விமானப் போரில் பங்கெடுத்துக் கொண்டவர்களில் ஒருவரானவரும், 'டெயிலி மெயில்' (The Daily Mail) என்ற ஆங்கில வெளியீட்டின் உதவி ஆசிரியராகவு மிருந்த 'பால் பியூஷர் (Paul Bewsher) என்பவர் எழுதிய 'நாக்ஸ் மார்டிஸ்' (Nox Mortis) என்ற ஆங்கிலக் கவிதையின் மொழி பெயர்ப்பு.)

*விரைந்து மாண்டிடவே மாலை விளங்கிருள் வளரவானில்*
*வரைந்துமான் மதிவந் தெய்த வயங்கிரா மாது கொண்ட*
*பராஅதெழில் காட்டுஞ் செய்ய பட்டெனு மாடைமீது*
*நிரந்துமுன் எழுமீன் போந்த நிலவிய ஒளியைக் கான்று.* **1.**

*வெள்ளிய மறுகினூடு வியத்தகு தேரை யூரப்*
*பள்ளியில் இரவுக் காலப் பறவைகள் இனத்தைக் கூட்ட*
*உள்ளினின் மரத்தை வெளவ்வால் உறுசிற கடித்துச் சுற்றக்*
*கள்ளரின் எலிகள் போந்த களஞ்சியச் சாலை நின்று.* **2.**

*இரவுலாம் பறவை யொத்தே எழுந்துயான் சுழன்று வானில்*
*உரவிலா திருண்டே யென்றும் உலகியல் அறியா நாட்டில்*
*பரவியே கொல்லும் வெம்ய பண்பிலா நஞ்சந் தன்னை*
*விரவியே யிரக்கமின்றி வீசினேன் சாலவெல்லாம்.* **3.**

*வேகமாய் இறக்கை சுற்ற விரைந்தெழுந் தார்த்தொ லித்தே*
*ஏகமாய் இருளிற் செல்லற் கின்புறும் வண்டே போல*
*ஆகலை யோதை தோன்ற அல்லெலாம் நானு கையப்*
*பாகமே பிறக்கை யேய்ந்த பருப்பொறி விண்ணி னீந்தார்.* **4.**

*இறப்போடி டுக்கண் துன்பம் இவையெலா மீந்தே அன்னர்*
*திறஞ்சிறி தறியே னாகிச் சிதைத்தனன் குருடே யாகி*
*மறமிலா அனேக வுள்ளம் மல்கின துன்ப வெள்ளம்*
*இறந்தவர் எழுக ! அந்தோ !! எழில்பெற வாழ்க ! அந்தோ !!* **5.**

*மும்மையும் வெறுக்குந் தீங்கு முறையிலாப் போரே யாகும்*
*இம்மைய வென்னை விண்ணின் நிறைத்திட வுய்க்கும் சாவை*
*செம்மைசெய் நல்ல மீனே தெற்றெனக் குணக்கில் வாராய் !*
*வெம்மைசெய் இறப்பினின்று விலகவே மக்கட் கூட்டம்.* **6.**

குறிப்பு:—(2) பள்ளியில்—தூக்கமில்லாத. உள்ளினின்—நினைத்தலினும் வேகமாய். (6) இம்மைய என்னை—இந்தப் பூமியில் உள்ள என்னை.

---

# சிவராமன்

(L. V. S. மணியன்)

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

கோம:—"எங்காத்துக்கு இவர் பிஷைக்கு வருவது வழக்கம். ஜுரம் என்று சொன்னார். நாலுநாளாக வரவில்லையே, இப்படிப்போறமே, பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன். யாரிடம் மருந்து வாங்கிக் கொடுக்கிறேள்."

தர்மா:—"எங்க நிலைமைதான் உனக்குத் தெரியும். நான் எங்கேயிருந்து இங்கிலீஷ் வைத்தியத்துக்குப் போகிறது? நாட்டு வைத்தியம் தான் பார்க்கிறேன். மருந்து பிடிக்கவில்லை. நேற்றையிலிருந்து ஜுரம் நிற்கவேயில்லை."

கோம:—"நான் எங்க டாக்டரைப் பார்க்கச் சொல்லுகிறேன். நீங்கள் பீஸிற்குக் கவலைப் படவேண்டாம். நாழியாகிறது நான் போய் விட்டு வருகிறேன்," என்று நாஸுக்காகச் சொல்லிவிட்டுக் கிளம்பினாள்.

ஆனால் தங்கள் வீட்டு டாக்டரைக் கூப்பிட்டால் கட்டாயம் அப்பாவுக்குத் தெரிந்து விடும் என்று பயந்தாள். அவள் சிவராமனை வந்து பார்த்ததே தெரியக்கூடாது என்றால், டாக்டரை அழைத்துக் கொண்டுபோனது எல்லாம் தெரியலாமா? சிவராமன் தேகநிலையோ அவளுக்கு ரொம்பவும் கவலையைக் கொடுத்தது. பணமில்லாமல் வேறு எந்த டாக்டர் வீட்டிற்கு வருவான்? என்ன செய்வது என்று புரியவில்லை. சிந்தித்தாள். பள்ளிக்கூடம் போகும் வழியில் இருக்கும் மார்வாடி கடை ஞாபகம் வந்தது. அந்த மார்வாடி கடையில் போய், தான் போட்டிருந்த இரண்டு சவரன் பெறுமான மோதிரத்தை முப்பது ரூபாய்க்கு விற்றாள். டாக்டர் ராகவனை அர்ஜண்ட் கேஸ் என்று ஐந்துரூபாய் பீஸ் கொடுத்து அழைத்து வந்தாள். டாக்டர் சிவராமனைப் பார்த்துவிட்டு, "பயமொன்றுமில்லை. இப்பொழுது எங்கு பார்த்தாலும் இந்தமாதிரி ஜுரம் வருகிறது. நான் ஆபீஸ் பையனிடம் மருந்து கொடுத்து அனுப்புகிறேன்," என்று போய்விட்டார். கோமளம் மீதியிருந்த இருபத்தைந்து ரூபாயையும் தர்மாம்பாளிடம் கொடுத்து, சிவராமன் மருந்திற்காகவும் வேறு செலவிற்காகவும வைத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, தானும் அடிக்கடி வந்து பார்ப்பதாகவும், ஆனால் தான் வந்தது வேறு ஒருவருக்கும் தெரிய வேண்டாமென்றுஞ் சொல்லி விடை பெற்றுக்கொண்டு பள்ளிக்கூடம் போய்விட்டாள்.

இன்றையதினம் மோதிரத்திற்காக என்ன பொய் கோமளம் சொல்லப்போகிறாள் என்று பார்ப்போம்.

சாயந்திரம் கல்யாணராமய்யர் ஆபீஸிலிருந்து வந்ததும், சுந்தரியோடு கேலியும் பரிகாசமுமாகப் பேசிக் கொண்டிருந்தார் அதில் கோமளமும் கலந்து கொண்டாள். தமாஷாகப் பேசிக் கொண்டிருந்தார்கள் அதுதான் சமயமென்று கோமளம், "அப்பா என்னுடைய மோதிரம் மத்தியானம் பள்ளிக்கூடத்தில் எங்கோ நழுவி விழுந்துவிட்டது. நான்

எவ்வளவு தேடிப் பார்த்தும் அகப்படவேயில்லை, அப்பா'' என்று கொஞ்சிக் கொண்டே சொன்னாள்.

கல்யாணராமய்யர் ரொம்ப குஷியாக இருந்ததால் "போனால் போகிறது. நான் ஹெட்மாஸ்டருக்கு லெட்டர் எழுதி விசாரிக்கச் சொல்லுகிறேன். நீ இப்போ இந்த மோதிரத்தை போட்டுக்கொள்." என்று தன் சுண்டுவிரலில் இருந்த வைரமோதிரத்தைக் கழற்றிக்கொடுத்தார்.

திங்கட்கிழமை காலையில் நேஷனல் ஹைஸ்கூல், ஹெட்மாஸ்டர் ரொம்ப யோசனையில் ஆழ்ந்திருந்தார். பள்ளிக்கூட நேரத்திற்கு முன்னதாகவே வந்து 'ஓ' வென்று இரைச்சல் போட்டு விளையாடிக் கொண்டிருந்த பையன்கள் பேரில் எல்லாம் 'சள்-பிள்,' என்று விழுந்தார். பாவம் பியூன் முனிசாமி மீதுகூட நாய்போல் கடந்து கொண்டார். இவ்வளவிற்கும் காரணம் அன்று சப் கலெக்டரிடமிருந்து வந்த சிறு கடிதமே. பிறகு மற்ற உபாத்தியாயர்களுடன் சேர்ந்து ஆலோசித்து கீழ்கண்ட ஸர்குலரை விடுத்தார்.

"நான்காவது பாரம் 'வ' செக்ஷனில் படிக்கும் கோமளத்தினுடைய, இரண்டு சவரன் பெறுமான தங்க மோதிரம், வெள்ளிக்கிழமை மத்தியானம் பள்ளிக்கூடத்தில் எங்கோ நழுவி விழுந்து விட்டது. அதைக் கண்டெடுக்கும் மாணவனோ, அல்லது மாணவியோ, கோமளத்திடம் மோதிரத்தைக் கொடுத்தால், அவள் மிகவும் நன்றியுடையவளாக யிருப்பாள்."

என்ன வேடிக்கை பாருங்கள்! ஆட்டைத் தோளில், போட்டுக் கொண்டே, தேடுவது போலல்லவா யிருக்கிறது இது.

பள்ளிக்கூடம் போகும் சமயத்தில் நாலைந்து பையன்கள் சேர்ந்து கொண்டு, பெண்பிள்ளைகளை 'கலாட்டா', செய்து கொண்டுபோவதைத் தினந்தோறும் நாம் ரோட்டில் பார்க்கிறோம். ஒரு பையன் சொல்கிறான்: "டேய், பின்னலைப் பாருடா? லீலா சிட்னிஸ், போல இருக்கு." இன்னொருவன்: "இல்லேடா, 'பிரம்மசாரி'யில் மீனாக்ஷி போல இருக்கு' என்பான். உடனே 'கொல்' என்று எல்லோரும் சிரிப்பார்கள். நடுவில் ஒருவன் "டேய், 'அம்பிகாபதி' பார்த்தையாடா", என்று அர்த்தமில்லாமல் கேட்பான். அதற்குள் மற்றொருவன், "நடையைப் பாருடா, கண்ணாம்பா, தான்டா," என்பான். மறுபடியும், மாணவர்களிடையே ஒரே சிரிப்பு.

பாவம் பெண்கள் தலையைக் குனிந்துகொண்டே இதையெல்லாம் சகித்துக்கொண்டு செல்வார்கள். இந்தமாதிரி "வெறும் வாயை மெல்லுகிறவர்களுக்கு, கொஞ்சம் அவல் கிடைத்தது போலிருந்தது" மேற்கண்ட ஸர்குலர். பள்ளிக்கூடம் வரும்போதும் போகும்போதும், காரிலேயே கோமளம் போனதால், மாணவர்களுக்கு அவளை 'கிண்டல்', செய்ய சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஆனால் இப்பொழுது ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது.

பள்ளிக்கூடப் பையன்கள் அநேகமாக எல்லோருக்கும் இப்பொழுது ஒரு மோதிரம் கீழே அகப்பட ஆரம்பித்தது. எப்படி தன் கையில் போட்டிருக்கும் மோதிரத்தையே அகப்பட்ட மோதிரமாக உபயோகப்படுத்திக் கொள்ளுவான். தான் போட்டுக் கொள்ளாமலிருந்தால் தனது நண்பனிடமிருந்து மோதிரம் வாங்கிக் கொள்ளுவான். அந்த மோதிரத்தை

எடுத்துக்கொண்டு கோமளம் வரும் சமயம் பார்த்து அவளிடம்போய் "இது உன்னுடைய மோதிரம் தானே," என்று கேட்பான். பாவம், கோமளம் தலையைக் குனிந்துகொண்டே, மோதிரத்தைப் பார்க்காமல்கூட, 'இல்லை' என்று தலையாட்டி விடுவாள். இன்னும் கொஞ்சம் துணிச்சலான பையனாயிருந்தால், கோமளம் மோதிரம் தன்னுடைய தல்ல என்று தலையாட்டினதும், "பின், உன் மோதிரம் எப்படி யிருக்கும்? வேஷக்ஹேஸண்ட் போட்ட மோதிரமா, எஸ் போட்ட மோதிரமா, ஸாவர் மோதிரமா?" என்று ஏதோ தான் பெரிய துப்பறிபவன் போலவும், தன் கையிலேயே அவள் சொல்லும் அடையாளமுள்ள மோதிரம் அகப்படப்போவது போலவும் நினைத்துக்கொண்டு அவளுடன் சிறிதுநேரம் பேசுவதற்காக, அலைப்பான். ஆனால் கோமளம் ஒன்றிற்கும் பதில் சொல்லாமல் 'விர்' என்று போய் விடுவாள். ஆனால் இந்தமாதிரி உபத்திரவம் அதிகமாகவே தன் தகப்பனாரிடம் சொல்லி, "தனது மோதிரம் அகப்பட்டு விட்டதாகவும், இனிமேல் மாணவர்கள் மோதிரம் தேட வேண்டாமென்றும், இதுவரையில் தேடுவதற்குப் பட்ட சிரமம் போதுமென்றும்" மறுபடியும் ஸர்குலர் விடச் சொல்லி ஹெட்மாஸ்டருக்குக் கடிதம் வாங்கிக் கொண்டுவந்து கொடுத்த பிறகுதான் அந்த உபத்திரவம் நீங்கிற்று.

கிறகு, சிவராமனுக்கு ஜுரம் தணிந்து விட்டது உடம்பு ரொம்ப பலஹீனமாக இருந்தது. ரொம்பவும் இளைத்துப் போய்விட்டான். கை கால்கள் மிகவும் ஓய்ந்து போயிற்று. நடக்க சக்தியில்லை. அதனால் அவன் பள்ளிக்குப் போகவில்லை. உடம்பிற்குக் கொஞ்சம் தெம்பு வந்தபிறகு போகலாமென்று தர்மாம்பாள் சொல்லிவிட்டாள். சிவராமனுக்கு நன்றாக தன் நினைவு வந்தபிறகு, கோமளம் அங்கு வரவேயில்லை. வர வேண்டாமென்று இல்லை. அவளால் வர முடியவில்லை. சகவாஸம் கிடைக்கவில்லை. உடம்பு கொஞ்சம் சௌகரியமாக இருக்கது என்று கேள்விப்பட்டதும் போய், பார்க்கவேண்டும், பார்க்க வேண்டுமென்று எண்ணினாள். ஆனால் அவளுக்கு வர ஒழியவில்லை.

ஒருநாள், மத்தியானம் பள்ளிக்கூடத்திலிருந்து சிவராமனைப் பார்க்கப் போனாள். அந்த சமயத்தில் தர்மாம்பாள் வீட்டிலில்லை. கடைக்கு ஏதோ சாமான் வாங்கப் போயிருந்தாள். 'அம்மாமி', என்று கூப்பிட்டுக் கொண்டே கோமளம் உள்ளே நுழைந்தாள்.

சிவராமனுக்கு கடுமையாக ஜுரம் அடித்ததால் கொஞ்சம் காது அடைத்துக் கொண்டிருந்தது. கோமளத்தின் குரல் அவனுக்கு யாரென்று தெரிந்துகொள்ள முடியவில்லை. விழித்துக்கொண்டே படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தவன் கோமளம் குரலை கேட்டு 'யாரது?' என்று எழுந்து உட்கார்ந்து கொண்டான். கோமளம் அதற்குள் எதிரில் வந்துவிட்டாள். சிவராமனைப் பார்த்துவிட்டு, 'ஒருவருமில்லை, நான்தான்', என்றாள்.

சிவராமன்:—"ஓ, நீ, தானா! ஜுரமாயிருந்ததால், காது அடைத்துக் கொண்டாற்போ லிருக்கிறது. உன் குரலை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அந்த நாற்காலியில் உட்கார்," என்றான்.

கோமளம் நாற்காலி வேண்டாமென்று மூலையில் சாத்திவிருந்த பாயை எடுத்துச் சிவராமன் எதிரில் போட்டுக்கொண்டு உட்கார்ந்தாள்.

கோமளம்:—"அது சரி, இப்பொழுது உங்கள் உடம்பு எப்படி யிருக்கிறது?" என்றான்.

சிவரா:—"தேவலே. எல்லாம் உன்னுடைய புண்ணியத்தால் தான் என் உடம்பு யிருந்த நிலையில் நான் பிழைப்பேன் என்று நான் கொஞ்சம் கூட நினைக்கவில்லை."

கோம:—"ஆமாம், ஜுரம் அடித்தவர்களெல்லாம் செத்துப் போய் விட்டார்களாக்கும்," என்று சிரித்தாள்.

சிவரா:—(சிரித்துக்கொண்டே) "செத்துப் போகவில்லை. ஆனால் அன்றைக்கொருநாள் ஜன்னிகூட கண்டு விட்டதாமே. அம்மா நான் அன்னிக்கி பிழைப்பேன் என்று நினைக்கவில்லையாம். நீ பணம் கொடுத்து உதவி செய்யாவிட்டால் நான் என் தாய்க்குப் பிள்ளையாய் இன்றைக்கு இருக்கமாட்டேன்."

கோம:—"போதும், முகஸ்துதி எனக்குக்கூட அன்னிக்கி ரொம்ப பயமாகத்தான் இருந்தது. அம்மா எங்கே, ஆத்திலே இல்லையா?" என்றான்.

சிவரா:—"இல்லை. அம்மா கடைக்குப் போயிருக்கிறாள். நீ என் ரொம்ப நாளாக எனக்கு நல்ல நினைவு வந்தபிறகு வரவேயில்லை. நீ தான் வரவில்லையே! நாமாவது பிக்ஷைக்கு வந்து என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளலாமென்றால், அம்மா கண்டிப்பாக இப்பொழுது பிக்ஷைக்குப் போகக்கூடாது என்று சொல்லிவிட்டாள் எனக்கும் உடம்பு நன்றாயில்லை."

கோம:—"அப்படியேதாவது, அசட்டுப் பிசட்டுன்னு, 'நான் உனக்கு என்றைக்கும் கடமைப்பட்டவன்; உயிருள்ள வரையில் நீ செய்த உதவியை நான் மறக்கமாட்டேன்; உன்னாலேதான் நான் உயிர் பிழைத்தேன்; நான் இதற்காக என்ன கைமாறு செய்யப் போகிறேன்' என்றெல்லாம் ஆத்திலே வந்து உளறி வைக்கப் போகிறேள். முன்னாடியே அந்த உளறலை யெல்லாம் கேட்டுக்கொண்டு விடலாமென்று வந்தேன். நான் இங்கு வந்து போவது அப்பா, அம்மாவுக்குத் தெரியாது. தெரிந்தால் என் மானம் கப்பலேற வேண்டியது தான். இதைப்பற்றி நீங்கள் எங்கும் மூச்சு விடக்கூடாது. நான் இப்போ பள்ளிக்கூடத்திலிருந்து வருகிறேன். பள்ளிக்கூடத்திற்கு நாழியாகிறது. நான் போய்விட்டு வருகிறேன்" என்று கிளம்பினான்.

சிவரா:—"எனக்கு உடம்பு, சரியாக தேவலையாகிற வரையில் அடிக்கடி வந்துபோ."

கோம:—"சரி, ஆகட்டும்," என்று போய்விட்டாள்.

அவள் போனபிறகு சிவராமனம் யோசனையில் ஆழ்ந்தான். தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் ஏன் கோமளம் தனக்கு உதவிசெய்ய வேண்டும்? தன்னைப்பற்றி அவளுக்கு அவ்வளவு அக்கரை எதற்கு? இவ்வளவு அக்கரை எடுத்துக் கொள்வதால் அவள் தன்னை நேசிக்கிறாள் என்று நிச்சயமாகத் தெரிகிறது. அவனும் தான் நேசிக்கிறான். ஆனால் தன்னுடைய நிலைமை என்ன? அவளுடைய அந்தஸ்து என்ன?

சப் கலெக்டர் பெண், கல்யாணராமய்யர், தினந்தோறும் பிக்ஷையெடுத்து ஜீவிக்கும் தனக்கு, தனது அருமைக் குமாரியைக் கொடுப்பாரா? கொடுக்கலாமென்று நினைக்கத்தான் நினைப்பாரா? இல்லை, கோமளம்,

தன்னை மணக்க விரும்பினால் அவரது அந்தஸ்துக்குக் குறைவான தனக்கு கல்யாணராமய்யர், கல்யாணம் செய்துகொடுப்பாரா? என்று ஒரு சமயம் அவனுக்குத் தோன்றிற்று. மற்றொரு சமயம், 'உன்னை நேசிக்கவில்லை; உனக்குப் பரிதாபப்பட்டு, கோமளம் உதவி செய்தாள். ராத்திரிக் கஞ்சிக்குக்கூட பிக்ஷை யெடுக்காவிட்டால் வழியில்லாத உனக்கு ஒருநாளும் கோமளம் கிடைக்கமாட்டாள். பேசாமல் கிட்டாததை வெட்டென மறந்து விடு,' என்று அவன் மனது சொல்லிற்று. இவ்விதமாக சிவராமனின் மனம் ரொம்பவும் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தது.

ஒருமாதம் ஆயிற்று. சிவராமன் சொஸ்தமடைந்து விட்டான். பழைய படியும் பிக்ஷையெடுக்கப் போய்க் கொண்டிருந்தான். சந்தர்ப்பம் வாய்த்த போது கோமளமும், சிவராமனும் எதைப்பற்றியாவது பேசுவார்கள்.

ஒருநாள் சிவராமன் வீட்டில் இல்லாத சமயம், "உங்க பிள்ளை இருக்கிறாரா அம்மாமி," என்று கேட்டுக்கொண்டே கோமளம் உள்ளே வந்தாள். தர்மாம்பாள் "இல்லே. வெளியே எங்கேயோ போனான். இப்ப வருகிற சமயம் தான். ஏன் நிக்கறே? இப்படி வந்து உட்காரேன். என்ன விஷயம்.' என்றாள்.

"ஒன்றுமில்லை, ஒருவேலை, விஷயமாக அவருடன் பேசவேண்டும். எனக்கும் பள்ளிக் கூடத்திற்கு நாழியாகிறது. அவர் வருவதற்கு ரொம்ப நாழியாகுமா என்ன?" என்றாள்.

"அவன் போய் ரொம்ப நாழியாகிறது. அப்பவே வந்து விடுகிறேன் என்றான். இப்ப வந்துவிடுவான். செத்தை நாழியிரு" என்று தர்மாம்பாள் வாயை மூடு முன்னமே சிவராமன் கதவைத் திறந்துகொண்டு வருவதைப் பார்த்து "அதோ வந்துவிட்டாண்டி, அம்மா," என்றாள்.

சிவராமன் கோமளத்தைப் பார்த்தான். உட்கார்ந்திருந்த கோமளம் எழுந்து நின்றுகொண்டாள். "என்ன, சமாசாரம் கோமளம். எங்கே வந்தே?" என்றான் சிவராமன்.

கோமளம்:—"உங்களிடம் ஒரு விஷயம் பேசவேண்டும். அப்பா ஆபீஸிலே எதோ வேலை காலியிருக்கிறாப்போல யிருக்கு இன்றைக்குக் காலையில், ரொம்ப பேர் அப்பாவை வந்து பார்த்துக் கொண்டிருந்தா. அப்பா சாப்பிடும்போது, "உங்களை என்ன ரொம்ப பேர் காலம்பற வந்து பார்த்துக்கொண்டு இருந்தாளே. இன்னிக்கு எதாவது பார்டியா," என்று அம்மா கேட்டாள். "பார்டி ஒன்றுமில்லே. எங்க ஆபீஸிலே ஒரு வேலை காலியிருக்கு. அதற்காகத்தான் அவ்வளவு பேர் வந்தது. இது நல்ல வேலை. அதிர்ஷ்டமிருந்தால், என்னைப்போல ஆகும். ஆனால் எனக்கு இன்றைக்கு வந்தவா, ஒத்தரும் பிடிக்கவில்லை. உனக்கு யாராவது தெரிஞ்சவா இருந்தா சொல்லு. பண்ணி வைக்கிறேன். நம்ப பேரைச் சொல்லிக்கொண்டு யிருக்கட்டும்," என்று அப்பா சொன்னார். அம்மா யோசனை பண்ணி சொல்கிறேன் என்று சொல்லியிருக்கிறாள். நீங்க வந்து இன்றைக்கு சாயந்திரம் போய் அப்பாவைப் பாருங்கோ. அம்மாவும் யிருப்பாள். ஆனால் நான் சொன்னதாகச் சொல்லக்கூடாது. கேள்விப்பட்டதாகச் சொல்லுங்கோ. இதைத்தான் சொல்லவிட்டுப் போகலாமென்று வந்தேன். நாழியாகிறது. நான் போகவேண்டும்," என்று போகப் புறப்பட்டாள்.

"கோமளம், எனக்காக எவ்வளவு கஷ்டம் எடுத்துக் கொள்ளுகிறாய்? என் உயிரைக் காப்பாற்றினாய். அந்த உயிருக்கு உணவும் அளிக்க ஏற்பாடு செய்து விட்டாய். நான் ரொம்பவும் ஏழை. இதற்கெல்லாம் பிரதியுபகாரம், என்னால், உனக்கு என்ன செய்ய முடியும்?" என்றான் சிவராமன்.

கோமளம்:—"ஒன்றே, ஒன்று இருக்கிறது. அதை கேட்கிற நாள் வரும்போது கேட்கிறேன். சாயந்திரம் மறக்காமல் வாருங்கள், பள்ளிக்கூடத்திற்கு நாழியாகிறது. போய்விட்டு வருகிறேன்," என்று போய் விட்டாள்.

அன்றையதினம் சாயந்திரம் சிவராமன் கோமளம் வீட்டிற்கு போனான். கல்யாணராமய்யர், கூடத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு, சுந்தரியுடன் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தார். சிவராமனைப் பார்த்ததும், சிரித்துக்கொண்டே "என்னடா, சிவராமா, எங்கே இப்படி வந்தே? என்ன சமாசார" மென்றார்.

சிவராமன்:—"உங்களைத்தான் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்," என்றான்.

கல்யா:—"'சோழியன் குடுமி சும்மா ஆடாதே,' என்னை சாயந்திர வேளையிலே எங்கேடா பார்க்க வந்தே. விஷயத்தைச் சொல்லு," என்றார்.

சிவரா:—"உங்க ஆபீஸிலே, ஏதோ வேலை காலியிருக்குன்னு கேள்விப் பட்டேன். சாயந்திர வேளையிலே உங்களுக்கு, ஒழிந்து இருக்குமே. பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்," என்றான்.

சுந்தரி:—"நானும், சிவராமனைப் பற்றித்தான் உங்களிடம் சொல்ல வேண்டுமென்று இருந்தேன். நீங்கள் ஆபீஸிற்குப் போய்விட்ட பிறகு தான் சிவராமன் ஞாபகம் வந்தது. நீங்கள் சாப்பிடுவதற்கு முன்னாடியே, அவன் பிக்ஷைக்கு வந்துவிட்டுப் போய்விட்டான். நாளைக் காலம்பர அவனிடம் விஷயத்தைச் சொல்லி உங்களைப் பார்க்கச் சொல்லலாமென்று இருந்தேன். அவனே வந்து விட்டான்" என்றாள்.

கல்யா:-"சரி, என்னாலே முடிந்ததைச் செய்கிறேன். நன்றாக ஒழுங்கா வேலை பார்க்கவேண்டும். நாளைக்கு நன்றாக டிரஸ் பண்ணிக்கொண்டு, ஒரு அப்ளிகேஷன் எழுதிக்கொண்டு வா. என்னாலே ஆனவரையில் பார்க்கிறேன்" என்றார்.

சிவராமன் போனதும், "சிவராமன் தங்கமான பையன். பரீக்ஷை பாஸ் பண்ணி மூன்று வருஷம் ஆய்விட்டதாம். அம்மாவும் பிள்ளையும் ரொம்ப கஷ்டப் பட்டுக்கொண்டு இருக்கா. நீங்க கட்டாயம் இந்த வேலையை அவனுக்குப் பண்ணி வைக்கவேண்டும். அவனுக்கு வேலை ஆய்விட்டது என்றால் அவா கஷ்டமே விடிந்து விடும். ஏழைகள் சந்தோஷப் பட்டு ஆசிர்வாதம் பண்ணினா நம்ப குழந்தை நன்னாயிருப்பாள்," என்று சுந்தரி சொன்னாள்.

(தொடரும்.)

---

# அதிருப்தி

(P. N. வைத்தியநாதசுவாமி, B. SC.,)

அதிருப்தி! இதுதான் வாழ்க்கைக்கு ஜீவநாடி; இதிலிருந்துதான் வெற்றிமேல் வெற்றி; இதிலிருந்துதான் புதிய ஊக்கம்; இதிலிருந்துதான் வாழ்க்கையின் உயர்வு; இதிலிருந்துதான் புகழ்.

அதிருப்தியில் பேராசை முதலிய பேய் குணங்கள் கலக்கலாகாது. அதிருப்தி கொண்டோன் வாழ்க்கைக்கடலில் இறங்குகிறான். அவன் வழி மாளவில்லை. இதனால் அதிருப்தி கொள்கிறான். கடைசியில் அதிருப்தியின் காரணமாக கடலைக் கடந்தும் விடுகிறான். ஆனால் பேராசை மகன் இப்படியில்லை. 'அவன் கடக்கிறான் இவன் அக்கரை சேர்ந்து விட்டானே' யென்று மாத்திரம்; மனம் வெந்து வாடுகிறான். இவன் கடலில் இறங்கவே யில்லை; இனிடும் இரங்கப் போவதில்லை; இவன் அழிவு இத்தோடுதான்.

அதிருப்தியின் அரிய பெருமையை பழைய சரித்திரங்களும் விளக்கும். குறிப்பிட்ட அரசர்களை எடுத்துக் கொள்வோம். ஏதோ சில நாடுகளைப் பிடித்தனர். இத்தோடு அவர்கள் மனம் திருப்தி கொண்டது. வேறு நாடுகளை நாடவில்லை. இதற்கு மாறாக அவர்களிடம் அதிருப்தி ஏற்பட்டிருக்குமாகில் என்ன நடந்திருக்கும்? பெரும் சாம்ராஜ்யங்கட்கு சக்கரவர்த்தியாக வந்திருப்பார்கள். அவர்கள் புகழ் உலகில் படர்ந்து வளர்ந்திருக்கும். இதேபோல் தான் உள்நாட்டு விஷயங்களிலும். ஏதோ சில நன்மைகளை பொதுஜனங்கட்கு அரசன் செய்து விடுகிறான். இத்துடன் அவன் மனது திருப்தி அடைகிறது. ஆனால் இதற்கு மேலாக நன்மைகள் மக்கட்குக் கிடைப்பதில்லை. அரசன் மனதில் அதிருப்தி தோன்றி யிருந்ததென்று வைத்துக் கொள்வோம். இன்னும் எவ்வளவோ நன்மைகள் நடைபெற்றிருக்கும்; இன்பக்கடலில் எல்லோரும் குளித்திருப்பார்கள்.

இன்னும் பாருங்கள். முன்னணிக்கு வரும் நாடுகள் எவை? அதிருப்தி கொண்டவைகளே. (அதிருப்தி கொண்டு—அதாவது பேராசைகொண்டு அயலான் மீது போர் தொடுப்பதல்ல). தங்கள் நாட்டில் இந்திந்த சீர்திருத்தங்கள் வரவில்லையே; தங்கள் நாட்டில் இந்திந்த விளைபொருள்களில்லையே, தங்கள் நாட்டில் இந்திந்த நூல்களில்லையே!—இவ்வாறெல்லாம் அதிருப்தி கொண்ட நாடுகளே எதிர்காலத்தில் இன்னும் சிறப்புற்று விளங்கும். இதற்கு மாறாக பூரணதிருப்தி கொண்ட நாடுகளைக் கவனிப்போம். அவைகளை சோம்பல் பற்றுகின்றன ; கடைசியில் சோர்ந்தும் சாய்கின்றன.

ஏன் இன்று நமது இந்தியாவையே எடுத்துக் கொள்வோம். ஆங்கிலேயர்கள் நம்முடன் இரு நூற்றாண்டாக இருந்தவர்கள் தான்; இன்று அவர்கள் ஆட்சி நமக்கு அவசியந்தான்; இதுசமயம் அவர்கள் இல்லாவிட்டால் வேறொரு அன்னியன் நம்மைப் பிடித்து இன்னும் இம்சிப்பான்தான்—ஆனால் இதை யெல்லாம் கண்டு திருப்தி அடைந்து விடுவதா! அன்னையைப் பிணைத்திருக்கும் விலங்குகள் என்னாவது? அவள் கண்ணீரை யார் துடைப்பது? மற்றநாட்டு எழில் மங்கைகளைப்போல் இந்தியமாதும் அழகு சொட்

விளையாடி வரவேண்டாமா? ஏதோ அவர்கள் காட்டும் பிச்சை சுதந்திரத்தில் நாம் திருப்தி யடையலாமா! அதிருப்தி யன்றோ அவசியம் வேண்டும்!

வாழ்க்கையில் எடுத்துக் கொள்வோம். ஏதோ ஒரு சிறிய உத்தியோகம் கிடைத்து விட்டது; கொஞ்சம் சொத்துமுண்டு.—இத்துடன் மகனின் மனம் சாந்தி யடையலாமா? அது அவனின் முன்னேற்றத்துக்கு அடிகோலுமா! மற்றவர்களைப் பார்; எவ்வளவு செல்வாக்கோடு இருக்கிறார்கள்! இதைக்கண்டு அவன் அதிருப்தி கொள்ளவேண்டும்; ஆனல் இது பொறாமையாக மாறக்கூடாது.

பெரிய முதலாளி; அவனிடம் சிறு குமாஸ்தாவாக ஒருவன் சேருகிறான். அவன் மனதிலும் அதிருப்தி உலவவேண்டும். சே! இதென்ன வேலை? நாமும் நம் எஜமானைப்போல் உயரவேண்டும். அதற்கென்ன சரியான வழி? இன்றிருந்து அதைக் கவனிப்போம். இவ் வேலையில் அதிருப்தி யடைவோம். நம் எஜமானைப்போல் வர நல்லவழியில் முயற்சிப்போம். அப்பொழுதொரு ஊக்கம் பிறக்கிறது; அவனது வாழ்க்கை உயர்கிறது.

வீட்டிலுள்ள மகளைக் கவனிப்போம். இன்றோர்வித கறி சமைத்து நாதனுக்கு இடுகிறாள். அவனும் சந்தோஷமாக சாப்பிடுகிறான். இதைக் கண்ட அவள் பூரணதிருப்தி கொண்டுவிடக் கூடாது. குறிப்பிட்ட இந்தக் கறியை இப்படி சமைத்திருக்கக்கூடாது; நாளைக்காகட்டும் இந்த மாதிரி சமைத்து வைப்போம்.—இவ்வாறு அவள் மனதிலோர் அதிருப்தி இடம் பெறவேண்டும். இல்லையேல் அவள் மனதில் அதிகமாக அன்பு வளர இடமில்லை.

தெருவில் சுற்றிவரும் சோம்பேறிக்கும் அதிருப்தி அவசியம். ஏதோ இம்மாதிரி நம காலம் நடக்கிறதென்று அவன் எண்ணி விடக்கூடாது. இவ் வித வாழ்க்கை இனியும் கூடாதென்று அவன் அதிருப்தி கொள்ளவேண்டும். அப்பொழுதே அவன் வாழ்க்கை உயரும்.

கடவுளை வணங்கும் விஷயத்திலும் அதிருப்தி அவசியம். ஏதோ வருஷங்கள் பல கடுந்தவம் செய்தான்; இமயமலைச் சாரலிலிருந்தும் யோகம் பயின்று வந்தான்; பெரிய மகான்களிடமிருந்து ஆசி பெற்றிருக்கிறான்; இதெல்லாம் அவனுக்கோர் சாந்தி யளிக்கலாகாது. வெகுதூரம் கால்நடையில் பிரயாணம் செய்யவேண்டியவன்; கொஞ்சதூரம் வந்து விட்டான்; வழியிலொரு ஆலமரம்; அதன் பக்கத்திலோர் குளிர்ந்த குளம்; வெயிலின் கொடுமையைப் போக்க குளிர்ச்சியும், பசியின் தாபத்தைத் தணிக்க பலவித பழங்களும் கிடைக்கும். இதை யெல்லாம் கருதி, அவன் அங்கேயே தங்கி விடலாமா! அவன் நோக்கமென்ன? அவன் போய்ச்சேர வேண்டிய இடமேது! அற்ப சுகத்தில் திருப்தி கொண்டு என்றும் அழியாத பெரும் சுகத்தை கைவிட்டு விடலாமா!

ஆனல் ஒரேவித அதிருப்தி இருக்கிறது. அதை மாத்திரம் அலட்சியஞ் செய். அதாவது—உன்னை அணையும் மனைவிக்கு எவ்வளவுதான் செய், அவள் மனம் அதிருப்தியே யடையும்; புருஷன் வீடு சென்ற உன் மகள், எவ்வளவுதான் கொடு, அவளும் அதிருப்தியே கொள்வாள்; உன்

# கோபம்

(ஏ. எம். ரஷீத்.)

ஒரு காயம் பட்டு விட்டால், அதற்கு பதில் பழி வாங்க வேண்டுமென்ற அமரிக்கை இழந்த நிலை—சுபாவம் இழந்து தவிக்கும் தன்மை—அது தான் கோபம்; மற்றவர்கள் செய்த தப்புக்காக, நம்மை நாமே பழி வாங்கிக் கொள்ளுவது தான் கோபங் கொள்ளுதல்; கோபம் ஒரு குட்டிப் பைத்தியம்; அதனுடன் பொறுமை என்ற சைத்தானும் சேர்ந்து வாழ்க்கையைக் குறுக்கி விடுகின்றது.

அது கொந்தளிக்கும் கடல் அலைகளைப் போன்றது. அதை மிருதுவாக அடக்கித் திருத்தினால் பயங்கரமான கொடுமைகளைச் செய்யாது; சாந்தமாக வந்து கரையில் மோதி உள்ள சிப்பிகளையும் கிழிசல்களையுந் தான் மோதி விட்டுப் போகும்.

இது மனிதனுடைய மனதோடு கூடவே தொடர்ந்து செல்லும் நபும்சக ஆத்திரம்; வெறி. அது தேடிப்போகும் எந்தக் காரியத்தையும் அதனால் சாதித்து விட முடியாது. யார் மீது கோபம் உபயோகிக்கப் படுகின்றதோ அவனை விட, அந்தக் கோபத்தை ஏவினவனைத் தான் அது அதிகமாகப் பாதிக்கின்றது. அளவு, அடக்கம் இல்லாமல் கட்டுக்கு மீறின கோபத்தைப் போல மனிதனை இவ்வளவு மிருகத்தனமாகவும், குறையுள்ளவனாகவும் செய்வது இயற்கையில் ஒன்றுமே இல்லை.

அடிக்கடி கோபம் வந்து கொண்டிருந்தால் கடைசியில் அது ஆத்மாவிலேயே ஒரு நிரந்தர கெட்ட பழக்கத்தை ஏற்படுத்தி விடுகின்றது. மூர்க்க குணம், ரௌத்திரம் இரண்டும் அவனை அலைகழிக்க வைக்கும். அதன் பலன் கசப்பு, வெடு வெடுப்பு, வெறுப்பு, ஒரு உன்மத்த நிலை—எல்லாம் சேர்ந்து விடும். மனம் அற்பத்தனமாகி விடுகின்றது. சச்சரவு, மனப் பான்மை எல்லாம் அளவு மீறி கூத்தாட ஆரம்பிக்கின்றன. அவை யெல்லாம் ஆழப் பதிந்து அவனையே ஒரு உருவில்லாமல் செய்து விடுகின்றன.

நம் கோப முகத்தை யார் கண்ணாடியில் காட்டுகின்றார்களோ அவர்கள் தான் நம் உண்மைச் சிநேகிதர்கள். தங்கள் முகத்தைக் கழுவிக் கொள்ளும் பொழுது அநேகர் எதிரில் கண்ணாடி இருக்க விரும்புகின்றார்கள். அதனால் என்ன பிரயோஜனமோ தெரியவில்லை. ஆனால் கோப நிலையில், இயற்கைத் தோற்றம் உருக்குலைந்து தாறுமாறாக இருக்கும் அவ

---

மகனை மணந்தவள், அவளுக்கும் என்னதான் கொடு ; அதிருப்தியே ஏற்படும். இதை யொத்த அதிருப்திக்கு இங்கு இடமில்லை.

ஆக, அதிருப்தி ஓர் அரிய வரம்; பரமன் அளித்த சஞ்சீவி; இதில் பொறுமையில்லை; சோம்பல் கிடையாது; பேராசை வந்து சேராது; ஆனால் நல்ல உழைப்புண்டு; ஊக்கமும் உணர்ச்சியும் தோன்றும்; வாழ்க்கையின் ஜீவகளை வளரும். அதிருப்தி பரவுக; நாடு செழிக்கும்; நன்மை செடிகள் எங்கும் பூத்து மலர்கள் கொட்டும்.

லக்ஷண தோற்றத்தைப் பார்த்துக் கொண்டால் கோபத்தின் மீது எல்லை யற்ற கசப்பு உண்டாவதற்கு அது எவ்வளவோ உபயோகமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. அடக்கி ஆளப்பட்ட கோபம் புத்திசாலித் தனந் தானே!

கோபிஷ்டனை அறிவற்ற சட்டம் அறிந்து விடுகின்றது; ஆனால் கோபிஷ்டன் கேவலம் சட்டத்தைக் கூட தெரிந்து கொள்ளுவதில்லை. ஒருவன் ஒரு தப்பு செய்து விட்டு அதை ஒப்புக்கொள்ள மறுக்கும்பொழுது தானே கோபங் கொள்ளுகின்றான். கோபம் எப்பொழுதும் தன்னை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுவதே இல்லை. ஆனால் அதன் பலாபலன்கள்?......அப்பா! கோபம் உண்டாகும் பொழுது ஒருவன் கொஞ்சநேரம் அதன் பலாபலன்களை நினைத்துப் பார்ப்பானானால்?.........இவ்வளவு மூர்க்கங் கொண்ட கோரம் கடைசியில் எப்படி மடிகின்றது—வெறிபிடித்த நிலையிலிருக்கும் ஒரு குதிரையை அதன் போக்குப்படி விட்டு விட்டால் கடைசியில் அது தானே அயர்ந்து போய் விழுந்து விடுகின்றதல்லவா, அது போலத் தானே!

மனிதனே! நீ விரும்புகின்றபடி மற்றவர்களை ஆக்க முடியவில்லையே என்று கோபப்படாதே. நீ இஷ்டப்படுகின்றபடி உன்னையே ஆக்கிக் கொள்ள உன்னால் முடியவில்லையே!

---

## கட்டுரையாளர் கவனிக்க.

கட்டுரையாளர் தாங்கள் எழுதும் கதை கட்டுரைகளைப் புக் போஸ்டில் அனுப்பும்போது, ஸ்டாம்பைக் கவரின்மீது சரியாக ஒட்டி அனுப்பவேண்டும். தபால் அதிகாரிகள் கட்டுரைகளைப் பரிசோதிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும்படி கவரை ஒட்டவேண்டும். 'ஆனந்த'னுக்கு வியாசம் அனுப்பும் நேயர்களில் பலர் கவரில் பாதியும் கட்டுரை யெழுதியுள்ள காகிதத்தின்மீது பாதியுமாக ஸ்டாம்பை யொட்டி அனுப்புகிறார்கள். மற்றுஞ் சிலர் கவரை மூடியும், அதன்மீது கயிற்றைக் கட்டியும் அனுப்புகிறார்கள். இது தற்போதைய தபாற் சட்டத்திற்கே விரோதமான தாகையால், மேற்குறித்த விதமாகவுள்ள கவர்களுக்கு இரட்டிப்பாகத் தபாற் கட்டணம் வாங்கிவிடுகிறார்கள். இதனால் நமக்கு கஷ்டமும் நஷ்டமும் ஏற்படுகிறது. இதையெல்லாம் கவனித்துக் கட்டுரையாளர் நடந்துகொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

பத்திராதிபர்.

# ஈகை

(க. சிதம்பரம் பிள்ளை.)

இறுதிக்காலத்தில் மனிதன் மறுமையாகிய அவ்வுலகத்தை அடைய வேண்டுமென்றால், இவ்வுலகத்தின் உதவி கொண்டு தான் ஆகவேண்டும். ஏன்? அவ்வுலகத்துக் கதவின் தாழ்ப்பாள் இவ்வுலகத்தில் இருக்கிறது. அத் தாழ்ப்பாளை இங்கு திறந்தால், அங்கு கதவு திறந்து விடும்.

அந்தத் தாழ் எது? அதுதான் ஈகை. உதவி செய்தே யாகவேண்டும் என்ற நிலையிலுள்ள ஏழைகளாயுள்ளோருக்கு தம்மால் இயன்றதை இல்லை யென்னுமல் கொடுப்பதே ஈகை யாகும்.

ஆம், அப்படிக் கொடுக்குங் குணம் மனிதனுக்கு வேண்டியதுதான்; ஆனால், அதற்குப் போதுமான அளவு செல்வம் இருக்கவேண்டுமே? இல்லை; ஈகைக் குணத்துக்குச் செல்வம் இருந்தே யாகவேண்டு மென்பதில்லை.

ஈகை என்பது கேட்பவர்களுக்கெல்லாம் பொருளை வாறி வாறி இறைப்பதென்பதல்ல. அப்படிச் செய்வதில் அர்த்தமுமில்லை. எவரும் தத்தம் நிலைமைக்குத் தக்கபடியுள்ள உதவிகளைப் பிறர்க்குச் செய்யலாம். ஒரு வயிற்றுச் சோறுதான் ஒருவனுக்கு உண்டென்றிருந்தாலும் அதில் ஒரு பிடி சோற்றை, இல்லையென்று இரக்குங் கதியற்ற ஏழைக்குக் கொடுக்க பணம் எதற்கு வேண்டும்? இங்கு வேண்டியதெல்லாம் மனேபக்குவம் ஒன்றுதான். *

'தருமம் தலைகாக்கும் என்கிருர்களே; யான் எத்தனை தருமங்களில் எவ்வளவு பொருளைச் செலவிட்டிருக்கிறேன்! இன்னும் செய்து கொண்டும் வருகிறேனே; அப்பேர்ப்பட்ட எனக்குத்தானே மேன்மேலும் இடையூறுகள் சேரிடுகின்றன?' என்று அதோ ஒரு பணக்கார அனுபவஸ்தர் கேட்கிருர்.

அவருடைய கேள்வி என்னவோ உண்மையாக இருக்கலாம். ஆனால், அவர் செய்வது தருமமல்ல; தன்னுடைய பணத்தின் பெருமையை தருமம் என்ற பெயரால் வெளியாருக்கு விளம்பரப்படுத்திக் காட்டுகிருர் என்பது மட்டுந்தான்.

உண்மைக் கொடையின் இலக்கணம் என்னவென்றால்: செல்வம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அது இருந்தாற்போலவே மனமகிழ்ந்து, முகமலர்ந்து, இன்சொற் கூறி, உண்மை அன்புடன் கொடுப்பதாகும். அவ்வித கொடை தக்க பயனைத் தராமற் போகாது.

மேற்சொன்ன நற்குணம் யாருக்கு இருக்கிறதோ அவர்களுடைய வரு

---

* இதைப்பற்றி விரிவாய் "மனிதனும் கடமைகளும்" புத்தகம் பார்க்கவும். கிடைக்குமிடம்: "ஆனந்தபோதினி" ஆபீஸ், சென்னை.

சையை நோக்கி மோட்ச உலகத்தி லிருப்பவர்கள் அவ்வுலகத்துக் கதவைத் தயாராகத் திறந்து வைப்பார்களாம்.

"இல்லா இடத்தும் இயைந்த அளவினால்
உள்ள இடம்போல் பெரி(து) உவந்து,—மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்கு
அடையாவாம் ஆண்டைக் கதவு."

[இல்லா இடத்தும்=செல்வம் இல்லாமற் போனகாலத்திலும். இயைந்த அளவினால்=இயன்ற மட்டும், கொடை=ஈகை. பட்ட=பொருந்தின. ஆண்டைக் கதவு=மோட்சவுலகத்துக் கதவு.]

'செல்வம் ஓரிடத்து எப்பொழுதும் நிலையாக நிற்கக் கூடியதல்ல. அது ஆற்று வெள்ளத்தால் உண்டாகிற மேடும் மடுவும்போல் மாறிக் கொண்டே இருக்கும்' என்கிறார்களே. அப்படி யென்றால், ஒருவன் நெடுங் காலமும் செல்வவந்தனாகவே இருக்கிறானே, அது எப்படி?

இல்லை; செல்வம் மேற்சொன்ன இயல்பை யுடையதுதான். ஆனால் ஒருவன் முற்பிறப்பில் நல்ல வினையைச் செய்திருந்தால், அவ்வினையின் பயனுக்குப் போதுமானவரையும் அவனிடத்துச் செல்வம் இருந்தே தீரும். வினைப்பயன் குறையக் குறைய அவனிடத்துச் செல்வமும் குறைந்து கொண்டே வரும்.

'செல்வம் ஒருவனிடத்திருந்து இறக்கை முளைத்துப் பறந்துபோய் விடாதே. அதைச் செலவழித்தால்தானே குறையும்? குறைந்து போகும் வகையிலுள்ள செலவினங்களைச் சுருக்கி விடுவோம். துன்பத்தால் மிக வருந்தும் ஒருவனுக்குக் கூட ஒரு காசுங் கொடாமல் அதை நன்றாக இறுக்கிப் பிடித்துக் கொள்வோமே. நமக்கு வேண்டிய செலவுகளிலும் சிக்கனம் காட்டுவோம். பின் அது எப்படி நம்மிடத்துக் குறையும்?'

அங்ஙனமன்று; வறுமையால் துன்பப்படும் ஏழைகளுக்கு ஒத்தாசை செய்வதிலும், தனக்கு வேண்டிய சவுகரியங்களைச் செய்து கொள்வதிலும் செல்வம் குறைந்து போகாது. ஊற்றுநீர் இறைக்க இறைக்க சுரந்து பெருகுதல்போல, அவ்வித நற்செய்கைகளி லிருந்தெல்லாம் அது மென் மேலும் பெருகத்தான் செய்யும்.

ஆனால், செல்வத்தை என்னதான் இறுக்கிப் பிடித்திருந்தாலும் வினைப்பயன் குறையுங் காலத்து அது எப்படியும் பறக்கத்தான் செய்யும். அதற்கு வேண்டிய காரணங்களும் அப்பொழுது எதிர்பாராமலே வந்து கொள்ளும். எனவே, செல்வத்தை அது உள்ள பொழுதே இயன்ற மட்டும் தானும் உபயோகித்துப் பிறர்க்கும் உதவி செய்தல் வேண்டும் என்பது கருத்தாம்.

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார்,
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்,
இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்,
விடுக்கும் வினைஉலந்தக் கால்."

[நடுக்குற்றுத் தற்சேர்ந்தார்=ஏழ்மையினால் நடுங்கி தன்னைச் சேர்ந்தவர்களது. துய்ப்பினும்=அனுபவித்தாலும். ஈண்டுங்கால் ஈண்டும்=

பெருகுங் காலத்துப் பெருகும். விடுக்கும் வினை உலந்தக்கால்=முற்பிறப்பில் செய்துவிட்ட அந் நல்வினை முடியுங்காலத்து.]

பனைமரத்திலும் ஆண்பனை, பெண்பனை என்ற இரண்டு பிரிவு உண்டு. பெண்பனை காய்க்கும். ஆண்பனை காய்க்காது.

பனையின் இளங்காய்க்கு நுங்குக்காய் என்று பெயர். அதனுள் இருக்கும் நுங்கை யாவரும் உண்பது வழக்கம். அது சில நோய்களைக் கூட மாற்றும் என்று வயித்திய நிபுணர்கள் சொல்கிறார்கள். பனம் பழத்தையோ ஏழைமக்கள் பலர் உண்டு பசியாற்றிக் கொள்கின்றனர்.

அவ்வித பனைமரம் ஒரு ஊர் நடுவில் இருந்து, அதைச் சுற்றிலும் மேடையும் கட்டப்பெற்றிருந்தால், எத்தனையோ மக்கள் அங்கு வந்து, அதன் நுங்கையும் பழத்தையும் எடுத்து, அம்மேடைமேல் இருந்து, உண்டு மகிழ்ந்து பசியாற்றிக் கொள்வர்.

ஆனால், ஒரு ஆண்பனையினிடத்திருந்து அவ்வித நற்குணங்களை எப்படி எதிர்பார்க்கலாம்? அதிலும் அது, உயிர் நீங்கிய உடலத்தை இடுங்காடாகிய சுடுகாட்டில் நிற்குமேயானால், அதனால் ஏழை மக்களுக்கு என்ன பயன்?

பரோபகாரிகள் மேற்சொன்ன பெண்பனைக்கு ஒப்பாவர். கொழுத்த பணம் படைத்தவர்களாயிருந்தும் ஈகைக்குணம் இல்லாதவர் மேற்சொன்ன ஆண்பனைக்கு நிகராவர்.

"நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை அன்னர் பலர்நச்ச வாழ்வார் ;
குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை."

[வேதிகை=திண்ணை. படு=பொருந்திய. மாக்கள்=பகுத்தறிவில்லாத விலங்குக்கு ஒப்பானவர்.]

வாத்தியங்களில் வைத்து ஓசை மிகப் பொருந்தியது முரச வாத்தியம். அதைவிட முழக்கம் வாய்ந்தது இடி முழக்கம்; முரசின் ஓசை ஒரு காதம்—அதாவது ஏழரை நாழிகைதூரம் வரையில் கேட்கும். இடி முழக்கமோ ஒரு யோசனை—30 நாழிகைதூரம் வரையில் கேட்கும்.

ஆனால், இவ் விரண்டைக்காட்டிலும் மிக்க தூரம்-என்? சுவர்க்கம், மத்தியம், பாதலம் ஆகிய மூன்று உலகத்தும் கேட்கக்கூடிய ஓர் ஓசை இருக்கிறது. அதுதான் 'ஏழைகளுக்கு இவர் தருமம் கொடுத்தார்' என்று பெரியோர்கள் சொல்லும் சொல். எனவே, கொடையாளிகளுடைய புகழ் மூன்றுலகங்களிலும் பரவும் என்பது கருத்தாம்.

"கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்;
இடித்து முழங்கிய(து) ஓர் யோசனையோர் கேட்பர்;
அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல்,"

[கடிப்பிடு=குறுந்தடியால் அடிக்கப்படுகிற.]

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)

வீரமார்த்தாண்டன் திடுக்கிட்டான். இதிலிருந்து, "அரசகேசரியின் மரணம்," என்று பத்திரிகைகளில் வந்த சங்கதியை, முகமூடி நம்பவேயில்லையென்றும், அவன் 'அரசகேசரியும், வீரமார்த்தாண்டனும் ஒருவரே' என்னும் அவனுடைய எண்ணத்தை மாற்றவில்லையென்பதையும் தெரிந்து கொண்டான். பிறகு,

வீர:—முகமூடியே! நாம் ஒருவருக்கொருவர் அதிகமாக விசாரித்துக் கொள்வதற்கு முன் சில விஷயங்களைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். முகமூடி உருவத்தின் பின்னால் மறைந்திருக்கும் உருவம் யாராயிருந்தாலும் சரி; இது வரையில் அவர் செய்திருக்கும் குற்றங்களுக்காக அவரைத் தண்டிக்க வேண்டுமென்ற வஞ்சத்துடன் நான் வந்திருக்கிறபடியால், நமக்குள் அதிக 'உபயகுசலோபரி' வேண்டாமென்று நினைக்கிறேன்.

முகமூடி:—நல்லது! ஆனால், எல்லாக் குற்றங்களையும் பார்த்தது போல, இதையும் பார்க்கிறீர்களா?"

என்று சொல்லிய வண்ணம் அவ்வறையின் நடுவில் தொங்கவிடப் பெற்றிருந்த கம்பளியை ஒரு ஓரமாக விலக்கினான் முகமூடி.

மறு பக்கத்தில் அரசகேசரி கண்ட காட்சி அவரைத் திடுக்கிடச் செய்தது. அங்கு சிறையைப் போன்றதொரு அறை தனியாகக் கட்டப்பட்டிருந்தது. அதனுள் பல பெண்கள் அடைக்கப்பட்டிருந்தார்கள். அவர்களுள் ராமநாதனின் மனைவியாகிய ரமாமணியும், புருஷோத்தமனின் குழந்தையும் ஒரு பக்கத்திலிருந்தார்கள். அந்தச் சிறைக்கு எதிரில் ஒரு பெரிய நெருப்புக்குழி வெட்டப்பட்டிருந்தது. அங்கு இரண்டு முரட்டு மனிதர்கள் நின்றுகொண்டு அந்தக்குழியை மேலும் மேலும் எரிய விட்டுக் கொண்டிருந்தார்கள். அதிலிருந்து கிளம்பிவந்த புகையானது நேர் எதிரே சிறையில் அடைக்கப்பட்டிருந்த பெண்களின் மூக்குகளிலும், கண்களிலும் ஏற அவர்களுக்கு அப்போது சித்திரவதையாக இருந்தது.

அங்கு அடைபட்டிருந்தவர்களின் மனோநிலைமை எப்படியிருக்கும் என்று எண்ணிய வீரமார்த்தாண்டனின் கோபம் உச்ச நிலைக்கேறியது.

ஆனால் ஒரு விஷயத்திற்காக வீரமார்த்தாண்டன் பதறுமலிருந்தான்! ஏனெனில், அங்கே மனோன்மணியை அவன் காணவில்லை! அப்பொழுது,

முகமூடி:—அரசகேசரியே! இவர்களுக்காக இங்கே நான் தனி நரகம் ஏற்படுத்தியிருக்கிறேன். இவர்கள் பிறருடைய தவறின் மூலம், தாங்கள் துன்பமடைகிறார்கள்......................"

அதற்குள் அரசகேசரி இடைமறுத்து, "உன்னால் அநியாயமாகக் கெடுக்கப்பட்டவர்களின் பாபங்களுக்காக இவர்கள்—கேவலம் ஸ்திரீகள்—துன்பமடைகிறார்கள். நீ, பல மனிதர்களை ஏமாற்றி அவர்களின் உயிர்களையே அடமானமாகப் பெற்று, உன் பணத்தை அவர்களுக்குப் பதிலுக்குக் கொடுத்து, அதன் மூலம் அதிகமாகச் சம்பாதிக்கிறாய்.—பல மனிதர்களைத் தற்கொலை செய்து கொள்ளும்படியாகச் செய்வித்து அவர்களுடைய மனைவி

களை இங்கு சிறையிலடைத்திருக்கிறாய். இவர்களைப் பலவந்தப்படுத்தி இவர்களினால்—நீ சொன்னது போல—எழுதப்படும் பல கடிதங்களை, இவ்வுலகத்தில் பல பாகங்களிலிருந்து, உன் ஆட்களின் மூலம், இவர்களுடைய உறவினர்களுக்கு அனுப்புகிறாய். இவர்களால் கிடைக்கும் லாபத்தைக் கொண்டு நீ பிழைக்கிறாய்!............"

முகமூடி:—பேஷ்! அப்பொழுது, நீங்கள் அதிக விஷயங்களைத் தெரிந்து கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறதே?

அரச:—ஆம்! தவிர, நீ தான் ராமநாதனைத் தற்கொலை செய்து கொள்ளும்படி செய்வித்து, அவன் தற்கொலையின் மூலம் கிடைக்கும் இன்ஷியூரன்ஸ் பணத்தை யடைவதற்காக, அவனுடைய மனைவியான ரமாமணியை இங்குச் சிறை பிடித்து வைத்திருக்கிறாய்.

முகமூடி:—வாஸ்தவம் தான்! ஆனால் நீங்கள் இக் காரியங்களில் இவ்வளவு தூரம் தலையிட்டதற்காக நான் விசனப்படுகிறேன். நான் ஆரம்பத்திலேயே தங்களுக்கு எச்சரிக்கை செய்திருந்தும், அதை மீறி நடந்து, என் ஆட்களிலும் பலரைக் கொன்று விட்டீர்கள். தவிர இச் செய்கைகளின் மூலம், இவ்வுலகத்திலேயே பெரிய பணக்காரனாக விரும்பிய என்னைத் தடை செய்யும்படிச் செய்ய, நான் உங்களை அநுமதிக்கப் போவதில்லை."

அரசகேசரி இப்பொழுது, சந்தேகப்பட்டார். ஏனெனில் இக் குரலை எங்கேயோ கேட்டிருப்பதாக, அவருக்குத் தோன்றிற்று. முகமூடி மிகவும் சாமர்த்தியமாக தன் தொண்டையை மாற்றிக்கொண்டு பேசுகிறானென்பதைத் தெரிந்து கொண்டார். ஆனால் குரலைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

ஆனால், முகமூடி மனிதனும் முட்டாளில்லை. அதிகமாகப் பேச்சை வளர்த்துவதற்கு விரும்பவில்லை. அவன் கடைசியில், "இவ்வளவு தான். வீரமார்த்தாண்டரே! தாங்கள் இறப்பதற்குத் தயாரா யிருக்கிறீர்களா?" என்று அதிகாரமாகவும், அகம்பாவமாகவும் கேட்டான்.

வீர:—புருஷோத்தமனையும், அவனுடைய குழந்தையையும், (நாம் ஒப்பந்தம் செய்து கொண்டபடி) விடுவித்தால், அப்பொழுது 'நான் தயாராயிருப்பேன்,' என்பதை நிச்சயமாக நம்பலாம். ஏனெனில் வீரமார்த்தாண்டன் சொன்ன சொல் தவற மாட்டான்.

முகமூடி:—இந்தச் சந்தர்ப்பத்தில் நான் அப்படிச் செய்யமுடியாது. ஏனெனில் நீங்கள், என்னிடத்தில் வசமாக மாட்டிக்கொண்டிருக்கிறீர்கள். தவிர புருஷோத்தமனின் தற்கொலையால் எனக்குக் கிடைக்கக்கூடிய லாபத்தையும் இழக்க நான் விரும்பவில்லை."

இப்பொழுது புருஷோத்தமனின் முகம் வெளுத்தது. அவன் பயத்துடன், "ஐயா, முகமூடியே! நீங்கள் என் குழந்தையை விடுதலை செய்து விடுவதாக, வாக்குறுதி செய்து கொடுத்திருக்கிறீர்களே. அதை மறந்து விட்டீர்களா?" என்று கேட்டான்.

அதற்கு முகமூடி சாவதானமாக, "ஆம்! நான் சொன்னது நிஜமே. ஆனால், அதை நம்பிய நீ, ஒரு முட்டாள் என்று நினைக்கிறேன். வீரமார்த்

தாண்டன் கூட இப்பொழுது ஏமாந்து போய் விட்டான்." என்று கூறினான்.

அப்பொழுது கதவினருகில் சந்தடி யுண்டாயிற்று. உடனே புருஷோத்தமன் திரும்பினான். ஆனால் வீரமார்த்தாண்டன் கடைக் கண்ணால் மட்டும் கவனித்தான். அப்போது வாசற்படியில் ஒரு முரட்டு மனிதன் கையில் கத்தியோடு தயாராக நின்று கொண்டிருந்தான்.

முகமூடி, அம் மனிதனுக்குச் சைகை காட்டி விட்டு, வீரமார்த்தாண்டனிருக்கும் பக்கமாக நெருங்கிய வண்ணம், "வீரமார்த்தாண்டரே! நான் மிகவும் விசனப்படுகிறேன். ஏனெனில் தாங்கள் இப்பொழுது தங்களுயிரை இழக்கப் போகிறீர்கள்," என்று சொன்னான்.

——(0)——

# 10-வது அத்தியாயம்

## அதிசயச் சம்பவங்கள்—முடிவு

இப்பொழுது வீரமார்த்தாண்டன் புருஷோத்தமன் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். அவனுடைய கண்களின் ஓரத்தினால், அம் முரட்டு மனிதன் கத்தியை ஓங்கிக்கொண்டு தன்னை நெருங்கி வருவதைக் கண்டான்.

உடனே, "புருஷோத்தமா,! துப்பாக்கிகள்" என்று கத்திய வண்ணம் அம்முரட்டு மனிதனின் பேரில் பாய்ந்தான். திடீரென்று வீரமார்த்தாண்டன் மேற்படி கத்திய வண்ணமாகத் தன்மீது பாய்ந்ததினால் ஆச்சரியமுற்ற முரடன் சற்று வியப்புடன் தன் கத்தியை கீழே தாழ்த்தினான். ஆனால் இந்த ஒரு நொடிக்குள் வீரமார்த்தாண்டன் அம் முரடனின் கத்தி பிடித்திருந்த வலது கையைத் தன் இடது கையினால் பிடித்துக்கொண்டு—அதே சமயத்தில்—தனது வலது கையினால் அவனை முகமூடியின் பேரில் வேகமாக ஊந்தித் தள்ளினான். ஆனால் அதே சமயத்தில் முகமூடியும் ஒரு பக்கமாக ஒதுங்கிக்கொள்ள, அம்முரடன் நேராக நிலை தடுமாறிச் சென்று—அந்தோ! பரிதாபம்!—அங்கிருந்த பெரிய நெருப்புக்குழியில் தலைகீழாக விழுந்தான்.

மறு நிமிஷம் பயங்கரமான கூச்சலொன்று கிளம்பியது. அடுத்த நிமிஷம் நெருப்பில் தோல் வெந்தது போன்றதொரு வாசனை வந்தது. அப்புறம் அம்முரட்டு மனிதன் குழியைவிட்டு எழுந்திருக்கவில்லை.

இப்பொழுது வீரமார்த்தாண்டன் புருஷோத்தமன் எடுத்துக் கொடுத்த இரு துப்பாக்கிகளையும் கைகளில் தாங்கி, கம்பீரமாக நின்ற வண்ணம், முகமூடியை மறித்தான்.

"உம்! கைகளை, மேலே தூக்கு. இல்லாவிட்டால் சுட்டு விடுவேன்" என்று உத்திரவிட்டான்.

சிறைச்சாலையில் அடையப் பெற்றிருந்த பெண்கள், முரட்டு மனிதன் எதிர்பாராத விதமாக நெருப்புக்குழியில் மரண மடைந்ததைக் கண்டு, திடுக்கிட்டு அலங்கோலமாகக் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தனர்.

ஆனால், முகமூடி மனிதனே, தன் கைகளை மேலே தூக்காமல் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டிருந்தான் அதே சமயத்தில் புருஷோத்தமன், "வீரமார்த்தாண்டரே! தயவு செய்து முகமூடியைக் கொல்லாதீர்கள்! அவன் கொல்லப்பட்டால் அநியாயமாக இந்தச் சிறையி விடப்பட்டிருக்கும் அனைவரும் மரண மடைவது நிச்சயம். அதற்கான உண்மைகள் முகமூடியிடம் இருக்கின்றன" என்று கூறிய வண்ணம் வீரமார்த்தாண்டனின் கைகளைப் பிடிக்க முயற்சித்தான். ஆனால் வீரமார்த்தாண்டன் புருஷோத்தமனைத் தூரத் தள்ளி,

"அதெல்லாம் ஒன்றும் நடக்காது. முகமூடியே! வீரமார்த்தாண்டனின் வாக்குறுதியை நன்கறிந்திருப்பாய். நீ சொன்ன பிரகாரம் நான், கைகளில் ஆயுத மொன்றும் இல்லாமல் இவ்விடம் வந்தேன். ஆனால் உன் வார்த்தையை நீ காப்பாற்றவில்லை. நீ இப்பொழுது, புருஷோத்தமன் குழந்தையைவிட மறக்கிறாய். ஆனால் நான்........."

முகமூடி:—அரசகேசரியே! மேலே நீங்கள் பேசுவதற்கு முன்னால் நான் சொல்வதைக் கவனியுங்கள். உங்கள் பிரியையான மனோன்மணி உங்களுக்கு வேண்டுமானால் தயவுசெய்து என்னைச் சுடக்கூடாது. என்னை மட்டும் தாங்கள் சுட்டுவிட்டால் அப்புறம் இந்த ஜென்மத்தில் நீங்கள் மனோன்மணியை மீண்டும் காண முடியாது. ஆகவே தயவுசெய்து பதற வேண்டாம்............உம்! மனோன்மணிக்குப் பதில் என்ன பொருளை எனக்குக் கொடுக்கப் போகிறீர்கள்?"

என்று பல பேச்சுக்களைப் பேசி முடிவில் ஒரு கேள்வியைக் கேட்டான் முகமூடி.

வீரமார்த்தாண்டனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. இப்பொழுது தான் மனோன்மணியைப்பற்றிய ஞாபகம் அவனுக்கு வந்தது. அப்பொழுது மீண்டும் அவன் உள்ளத்தில் யாதோவொரு, பயம் தோன்றியது. அவன் தன்னையு மறியாமல், "மனோன்மணி எங்கிருக்கிறாள்? அவளை விடுவிப்பதற்கு நான் என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான்.

முகமூடி:—(சிரித்த வண்ணம்) மிகவும் சாமர்த்தியத்துடன் யோஜனை செய்யப் பட்டுக் கொண்டு வரப்பட்ட அவ்விரு துப்பாக்கிகளையும் என்னிடம் கொடுக்கவேண்டும். பிறகு வெறுங்கையுடன்,—கத்திகள் தாங்கிய என்-முரட்டு மனிதர்களுடன் சண்டையிட வேண்டும். ஏனெனில், வீரமார்த்தாண்டரே! நான் தங்களுடைய தேகவன்மையைக் காண விரும்புகிறேன்!—ஆனால்! நீங்கள் துப்பாக்கிகளை என்னிடம் கொடுத்தவுடனேயே, மனோன்மணி உங்கள் முன் தோன்றுவாள். அதில் கவலைப்பட வேண்டியதில்லை."

வீர:—இல்லை. முதலில் மனோன்மணி என் முன் தோன்றட்டும். பிறகு இங்கிருந்து வெளியே சென்று, ஒரு காகிதத்தில், 'நான் வெளிப்புறம் சென்று விட்டதாக எழுதிக் கொடுக்கட்டும். அக்கடிதத்தைப் பார்த்தால் நான் உடனே இவ்விரு துப்பாக்கிகளையும் உன்னிடம் கொடுத்து விடுகிறேன். இவ் விஷயத்தில் நான் பிரமாணம் செய்கிறேன்."

முகமூடி:—பிரமாண மொன்றும் செய்யவேண்டாம். உங்கள் வார்த்தைகளே எனக்குப் போதும்."

இப்படிச் சொல்லிவிட்டு முகமூடி அறையின் ஒரு மூலைக்குச் சென்று சுவற்றில் பதிப்பிக்கப் பட்டிருந்ததொரு கட்டையை யழுத்த—உடனே—சுவற்றினுடன் சேர்ந்தாற்போல் காணப்பட்ட இரகசிய அறை யொன்று திறந்தது. அப்பொழுது முகமூடி, "அம்மா! தயவு செய்து வெளியே வாருங்கள். உங்களைக் காண்பதற்காக அரசகேசரி இங்கு ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கிறார்" என்று கேலியாகக் கூறினன்.

சில நிமிடங்கள் கழிந்தன. அவ் வறையினுள்ளிருந்து மனோன்மணியின் உருவம் வெளிப் போந்தது. மனோன்மணி தட்டு தடுமாறி, அசதியினால் களைப்புற்றவள் போல், மெதுவாக நடந்து வந்தாள். முகமூடி, "உம்! வீரமார்த்தாண்டரே, மனோன்மணி இப்பொழுது விடுபட்டு விட்டாள்" என்றான்.

அரசகேசரி, மனோன்மணியை அன்புடன் பார்த்த வண்ணம், "பிரிய, மணி! நீ உடனே இங்கிருந்து புறப்பட்டு, பாஸ்கர விலாசிற்குச் செல். அங்கு ஜாக்கிரதையாய்ப் போய்ச் சேர்ந்த பின்னர், ஒரு காகிதத்தில், "ஜாக்கிரதையாயச் சேர்ந்து விட்டதாக," எழுதியனுப்பு. நான் அதைப் பார்க்க வேண்டும்" என்றார்.

'தனக்காக அரசகேசரி தியாகம் செய்கிறார்' என்ற எண்ணம் அவள் மனதில் தோன்றியிருக்க வேண்டும்! உடனே அவள் நிலையாக நின்று, "அன்பரே! அது முடியாது! நீங்கள் என்னை முன்னமே ஏமாற்றி விட்டு இந்த ஊருக்கு வந்தீர்கள். இப்பொழுது என் விடுதலைக்காக, தங்களுயிரை இழக்கத் தயாரா யிருக்கிறீர்கள். அப்படியானல் நானும் தங்களுடன் இறக்கச் சித்தமா யிருக்கிறேன். அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம்!" என்று கூறினள்.

கெடுகோரமாக அடைத்து வைக்கப்பட்டிருந்ததாலும், அவள் மெதுவாகப் பேசினள். ஆனல் அவள் குரலில் திடநம்பிக்கையும், தைரியமும் தோன்றின.

முகமூடி:—உம்! வீரமார்த்தாண்டரே! இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்கள்?

அப்பொழுது வீரமார்த்தாண்டன் மனதில் என்ன தோன்றியதோ!

அவன் உடனே தன்னிரு துப்பாக்கிகளையும் கோாகப் பிடித்து, "முகமூடியே! நான், மனோன்மணி வெளியே சென்று காகிதம் எழுதியனுப்பினல் என்னிரு துப்பாக்கிகளையும் கொடுப்பதாகச் சொன்னேன். ஆனல் அவள் அப்படிச் செய்யப் போவதில்லை யென்று இப்பொழுது சொல்லி விட்டாள். ஆகையால் நானும் துப்பாக்கிகளைக் கொடுக்க முடியாது. ஆனல், தயவு செய்து இப்பொழுது நான் சொல்வதைக் கவனி. அங்குத் தீயை மேலும் மேலும் மூட்டிக கொண்டிருக்கும் இரு முரடர்களையும் விட்டு, அந்தச் சிறைச்சாலையைத் திறக்கச் சொல்லி, அங்கிருக்கும் எல்லோரையும் வெளிப்படுத்த வேண்டும்! தெரிகிறதா, உம்!" என்று உத்திரவிட்டான்.

முகமூடி இப்பொழுது திடுக்கிட்டான். அவன், "ஏன், அவர்களை விட வேண்டும். அவர்கள் இந்த அகாலத்தில் எங்கே போவார்கள்?" என்றான்.

(தொடரும்.)

# சித்திரபானுஹு ஐப்பசிமீ நவக்கிரக
# நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன். | | சந்திரன். | | அங்காரகன். | | புதன் | | குரு. | | சுக்ரன். | | சனி | | ராகு. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச. | பா. | க. | பா. | க | பா. | க. | பா. | க | பா | க. | பா. | க. | பா | க. | பா. | க. |
| 1 | 1 | 39 | 25 | 179 | 45 | 269 | 56 | 176 | 23 | 167 | 20 | 89 | 58 | 171 | 11 | 49 | 25 | 128 | 03 |
| 2 | 1 | 43 | 21 | 180 | 44 | 283 | 55 | 177 | 01 | 167 | 42 | 90 | 02 | 172 | 24 | 49 | 21 | 128 | 00 |
| 3 | 1 | 47 | 18 | 181 | 44 | 297 | 55 | 177 | 39 | 168 | 04 | 90 | 07 | 173 | 38 | 49 | 17 | 127 | 57 |
| 4 | 1 | 51 | 14 | 182 | 44 | 311 | 49 | 178 | 17 | 168 | 47 | 90 | 10 | 174 | 52 | 49 | 14 | 127 | 54 |
| 5 | 1 | 55 | 11 | 183 | 44 | 325 | 44 | 178 | 56 | 169 | 30 | 90 | 16 | 176 | 07 | 49 | 10 | 127 | 50 |
| 6 | 1 | 59 | 07 | 184 | 43 | 349 | 10 | 179 | 36 | 170 | 11 | 90 | 19 | 177 | 22 | 49 | 06 | 127 | 47 |
| 7 | 2 | 03 | 04 | 185 | 43 | 352 | 37 | 180 | 16 | 170 | 53 | 90 | 22 | 178 | 38 | 49 | 02 | 127 | 44 |
| 8 | 2 | 07 | 00 | 186 | 43 | 5 | 34 | 180 | 56 | 171 | 34 | 90 | 26 | 179 | 53 | 49 | 59 | 127 | 41 |
| 9 | 2 | 10 | 57 | 187 | 43 | 18 | 31 | 181 | 36 | 172 | 16 | 90 | 30 | 181 | 09 | 48 | 55 | 127 | 37 |
| 10 | 2 | 14 | 54 | 188 | 43 | 30 | 56 | 182 | 15 | 172 | 57 | 90 | 33 | 182 | 24 | 48 | 52 | 127 | 34 |
| 11 | 2 | 18 | 51 | 189 | 43 | 43 | 21 | 182 | 55 | 173 | 39 | 90 | 37 | 183 | 40 | 48 | 48 | 127 | 31 |
| 12 | 2 | 22 | 47 | 190 | 43 | 55 | 30 | 183 | 35 | 174 | 20 | 90 | 40 | 184 | 55 | 48 | 45 | 127 | 28 |
| 13 | 2 | 26 | 44 | 191 | 43 | 67 | 39 | 184 | 15 | 175 | 02 | 90 | 44 | 186 | 11 | 48 | 41 | 127 | 25 |
| 14 | 2 | 30 | 40 | 192 | 44 | 79 | 40 | 184 | 54 | 176 | 01 | 90 | 46 | 188 | 03 | 48 | 38 | 127 | 22 |
| 15 | 2 | 34 | 37 | 193 | 44 | 91 | 41 | 185 | 34 | 177 | 00 | 90 | 49 | 183 | 56 | 48 | 35 | 128 | 19 |
| 16 | 2 | 38 | 33 | 194 | 44 | 103 | 23 | 186 | 13 | 178 | 17 | 80 | 50 | 191 | 10 | 48 | 32 | 127 | 15 |
| 17 | 2 | 42 | 30 | 195 | 45 | 116 | 05 | 186 | 52 | 179 | 34 | 90 | 52 | 192 | 25 | 48 | 29 | 127 | 12 |
| 18 | 2 | 46 | 26 | 196 | 45 | 128 | 36 | 187 | 31 | 180 | 51 | 90 | 53 | 193 | 39 | 48 | 26 | 127 | 09 |
| 19 | 2 | 50 | 23 | 197 | 45 | 141 | 07 | 188 | 10 | 182 | 08 | 90 | 54 | 194 | 53 | 48 | 23 | 127 | 06 |
| 20 | 2 | 54 | 19 | 198 | 46 | 154 | 18 | 188 | 49 | 183 | 25 | 90 | 54 | 196 | 04 | 48 | 20 | 127 | 03 |
| 21 | 2 | 58 | 16 | 199 | 46 | 167 | 29 | 189 | 28 | 184 | 42 | 90 | 54 | 197 | 15 | 48 | 17 | 126 | 59 |
| 22 | 3 | 02 | 12 | 200 | 47 | 180 | 46 | 190 | 07 | 185 | 59 | 90 | 54 | 198 | 29 | 48 | 14 | 126 | 56 |
| 23 | 3 | 06 | 09 | 201 | 48 | 194 | 03 | 190 | 46 | 187 | 16 | 90 | 54 | 199 | 43 | 48 | 11 | 126 | 53 |
| 24 | 3 | 10 | 05 | 202 | 48 | 208 | 09 | 191 | 25 | 188 | 11 | 90 | 54 | 200 | 57 | 48 | 08 | 126 | 50 |
| 25 | 3 | 14 | 02 | 203 | 48 | 222 | 15 | 192 | 05 | 190 | 07 | 90 | 54 | 202 | 11 | 48 | 05 | 126 | 47 |
| 26 | 3 | 17 | 58 | 204 | 49 | 236 | 34 | 192 | 44 | 191 | 41 | 90 | 44 | 203 | 25 | 48 | 01 | 126 | 44 |
| 27 | 3 | 21 | 55 | 205 | 49 | 250 | 53 | 193 | 24 | 193 | 15 | 90 | 54 | 204 | 40 | 47 | 51 | 126 | 41 |
| 28 | 3 | 25 | 51 | 206 | 50 | 264 | 59 | 194 | 03 | 194 | 48 | 90 | 54 | 205 | 54 | 47 | 56 | 126 | 38 |
| 29 | 3 | 29 | 48 | 207 | 50 | 279 | 05 | 194 | 43 | 196 | 22 | 90 | 53 | 207 | 08 | 47 | 46 | 126 | 35 |
| 30 | 3 | 33 | 45 | 208 | 51 | 293 | 16 | 195 | 22 | 197 | 56 | 90 | 52 | 208 | 22 | 47 | 42 | 126 | 32 |

## ஆகாயக் காட்சி.

11-ந் தேதி முன் இரவு மணி 10-க்குச் சந்திரனால் ரோஹணிக்குக் கிரகணம் சேரும்.

இதர சமாகமங்கள் நம் நாட்டிற்குக் காட்சிக் குரிய காலத்தே சேருவதில்லை.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**சித்திரபானு௵ ஐப்பசி௴—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865,**
**பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜரா 1361,**
**இங்கிலீஷ் 1942௵ அக்டோபர்௴—நவம்பர்௴**

| ஐப்பசி௴ | அக்டோபர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | சனி | அஷ்27-37 | உத்44-25 | சித்60 | துவாரவி நா-22-35 |
| 2 | 18 | ஞா | நவ22-12 | திரு40-47 | அ40-47ம | மகாநவமி, சரஸ்வதி பூஜை<br>ஆயுத பூஜை [பூஜை |
| 3 | 19 | திங | தச16-48 | அவி37-12 | சித்60 | விஜயதசமி, நவராத்திரி |
| 4 | 20 | செவ் | ஏகா12-35 | சத35-23 | மர60 | பாஸஙகுஸன ஏகாதசி |
| 5 | 21 | புத | து9-35 | பூர34-12 | அ34-12சி | பத்மநாப துவாதசி |
| 6 | 22 | வியா | திர7-12 | உட்33-36 | சித60 | கரிநாள், பிரதோஷம் |
| 7 | 23 | வெள் | சது6-0 | ரே34-11 | அமி60 | சுவாதி 1-ல் ரவி நா-56-57 |
| 8 | 24 | சனி | ○6-1 | அசு36-1 | சித்60 | விருச்சிகாயனம் நா-156 |
| 9 | 25 | ஞா | பிர6-37 | பர39-36 | சி39-36ம | ஆள்வீஜபகுலம் |
| 10 | 26 | திங | துதி9-1 | கி✻44-25 | ம44-25அ | கிருத்திகை விரதம், வியாதி<br>யஸ்தர், குளிக்க |
| 11 | 27 | செவ் | திரு12-56 | ரோ49-48 | அ49-48சி | |
| 12 | 28 | புத | சது16-47 | மிரு55-48 | சித60 | |
| 13 | 29 | வியா | பஞ்22-12 | திரு60-0 | மர60 | |
| 14 | 30 | வெள் | சஷ்27-35 | திரு2-24 | சித்60 | |
| 15 | 31 | சனி | சப33-0 | புன9-1 | சித்60 | |
| 16 | 1 | ஞா | அ37-46 | பூச15-0 | சித்60 | |
| 17 | 2 | திங | நவ40-48 | ஆயி19-47 | சி19-47ம | |
| 18 | 3 | செவ் | தச43-11 | மக24-1 | சித60 | |
| 19 | 4 | புத | ஏகா45-1 | பூர27-0 | அமி60 | |
| 20 | 1942௵ நவம்பர்௴ 5 | வியா | து44-25 | உத்28-12 | ம28-12சி | கரிநாள், கோ துவாதசி |
| 21 | 6 | வெள் | திர42-36 | அஸ்29-25 | சி29-25சி | தனதிரயோதசி, பிரதோ<br>ஷம், நாகசதுர்தசி ஸ்நா |
| 22 | 7 | சனி | சது40-12 | சித்28-24 | ம28-24அ | தீபாவளி பண்டிகை [னம் |
| 23 | 8 | ஞா | ●36-37 | சுவா26-24 | சி26-24ம | சர்வத்திர அமாவாசை |
| 24 | 9 | திங் | பிர32-25 | வி24-1 | 22-1சி | கார்த்திக சுத்தம், பலிபூஜா |
| 25 | 10 | செவ் | துதி27-36 | அ20-24 | சி20-24ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 26 | 11 | புதன் | திரு21-35 | கே16-48 | சி16-48ம | நாக சதுர்த்தி |
| 27 | 12 | வியா | சது15-37 | மூல12-35 | சித்60 | மாவலை சுடுதல் |
| 28 | 13 | வெள் | பஞ்9-35 | பூரா8-24 | பி8-24சி | ஸ்கந்த சஷ்டி, பிரயாணம் |
| 29 | 14 | சனி | சஷ்3-36<br>சப்58-12 | உத்4-47 | சித்60 | அவமாகம, வியாதியஸ்தர்<br>மருந்துண்ண |
| 30 | 15 | ஞா | அ53-25 | திரு1-11<br>அ57-36 | அ1-11ம | அவமாகம், துலாஸ்நானம்<br>கடைமுகம் |

| | | | |
|---|---|---|---|
| | | சனி | குரு |
| கே | 6-துலா-அங்<br>8-துலா-சுக்<br>17-துலா-புத | | |
| | | | ராகு |
| | | சூரி | அங்<br>பு-ச |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒருவிதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினாலுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியையுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றாது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், சத்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒருமுறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய தொடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும். புட்டி 1-க்கு விலை அணா 4. தபாற்கூலி வேறு.

# கண்நோய் மருந்து



இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல், சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணாக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச்சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணாடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணா 8. தபாற்கூலி வேறு.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# அயக்காந்த சத்தின் திராவகம்

இந்தத் திவ்ய ஔஷதம், விஷ சுரம் முதலிய எத்தகைய ஜுரத்தினும் தேகம் மெலிந்து வெளுத்துப்போனவர்களுக்கும், வேறு பல வியாதினால் தாக்கப்பட்டுப் பலமற்றுப் போனவர்களுக்கும், தாது விருத்தி நாட்டங்கொண்டு பல மருந்துகளைச் சாப்பிட்டு குணமடையாதவர்களுக்கு இது ஒரு அமிர்தமாகும் என்றே நிச்சயமாகக் கூறுவோம். இம்மருந்தை உட்கொள்வதால் மல ஜலம் தாராளமாய்க் கழிந்து பசியின்மையைப் போக்கி ஜீர்ண சக்தியைக் கொடுத்துப் பரிசுத்த இரத்தத்தைப் பெருக்கும். தாது விருத்தி உண்டாகும். தேகம் சிவப்படைந்து முகம் வசீகரமாகும்.



இம்மருந்தைச் சாப்பிடுகிறவர்கள் தேக திடத்தைப் பெற்று, வலிவுள்ள மக்களைப் பெறுவார்கள். சகல இன்பங்களையும் அனுபவிக்கலாம். ஆண்பெண் இருபாலரும் எப்பொழுதும் உபயோகிக்கலாம்.

பெரியவர்கள் ஒரு அவுன்ஸ் தண்ணீர் அல்லது பசும் பாலில் 10, 12 துளி வரையிலும், சிறியவர்கள் 2-முதல் 6, 7 துளிகள் வரையிலும் காலை மாலை இரு வேளையும் சாப்பிடவேண்டும். இதற்கு யாதொரு பத்தியமுமில்லை. எல்லா ஏழைகளும் வாங்கி உபயோகிக்கும்பொருட்டே மிகக் குறைந்த விலைக்கு விற்கிறோம். ஒரு மாதம் சாப்பிடக்கூடிய மருந்தின் விலை அணா 12. தபால் செலவு வேறு.

# சிவப்பிரகாச பல் பொடி

இந்தச் சிவப்பிரகாச பல் பொடி மற்ற இதர பல்பொடிகளைப் போலிராமல், அதிக சுகந்தமாகவும், பல் வலி, பல்லில் சொத்தை, ஈறு வளர்ந்திருத்தல், வாய் ரணம், வாய் நாற்றம், பல்லாட்டம் முதலிய வியாதிகளை நீக்குவதுமல்லாமல், பல் நன்றாய்த் துலங்கும்படிச் செய்யும். வாயில் சதா கம கம வென்னும் மணத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கும். ஒரு மாதத்திற்கு உபயோகிக்கக்கூடிய பல் பொடி டப்பி 1-க்கு விலை அணா 2.

6 டப்பிகள் அணா 10.



---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

பட்டவுடனே விஷம் பறக்கும்! அழுதவன் சிரிப்பான்!!

இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பாய் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நான்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும். விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபாற் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனாம், வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.

## மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி, மேக தாமரை, மேக நமைச்சல், மேக இரணம், மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லாவகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொரு முறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண விவரத்தை தெரியப்படுத்தவும்.

## சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை தேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# காப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், .சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை யெரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் நிறுத்தி கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை" தூங்கச் செய்யும். புட்டி 1-க்கு விலை ரூபா 1.

## ஜி. கியூர்

### இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் ஏற்படும் கள்ளநோய். நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக்கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தின் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழிந்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியவை இரா. 3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை ரூ. 1 0 0.

# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய விடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும்.

புட்டி 1-க்கு விலை அணா 8.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாருமில்லை
என்மலடாய்ப் போவதென்று கேட்பாயாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங்கெட்டா
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால் [ல்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கருதரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து நிலை சென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



# சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நோய் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0. தபாற்செலவு பிரத்தியேகம்.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள், மேக வாய்வு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், தொடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தோ, இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்பாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதும[illegible] உண்மையான மருந்து. இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

## எலிக்ஸ்லைரன்

### மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நான்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப் புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊறல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, பௌவனத்தைத் தரும்.



இம்மருந்து வெகு பிரயாசையின்பேரில் அதிகப் பணச் செலவினாலும், அநேகவிதமான மலையாள மூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டும் முறைப்படி தயார் செய்தது.

இம் மருந்தை யுட்கொண்டு, தங்கள் தேகத்தில் உள்ள வியாதியை அகற்றுங்கள். உண்மை விளங்கும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

20-நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக் கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூ. 2—4—0.

---

தனலட்சுமி கம்பெனி நெ. 6, ஷ்ராயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்.

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினாபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தஸிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரமபை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| மொட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| காலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மே[illegible] கதை ... | 0 | 8 |
| [illegible]கானின ஞானேந்திரி | 0 | 8 |
| [illegible]ன்மணி கதை | 0 | 8 |
| [illegible]ாமளவல்லி கதை | 0 | [illegible] |
| வ[illegible]டவல்லி கதை ... | 0 | [illegible] |
| தா[illegible]கட்ட மறந்த கதை ... | 0 | [illegible] |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

அநேக ... (ரிஜிஸ்டர்டு.)

## "சகுந்தலா" கூந்தல் வளரும்

## பரிமளத் தைலம்




டின் 1-க்கு விலை அணா 12.

இத்தைலத்தில் பரிமளம் எவருக்கும் இஷ்டத்தை யளிக்கும். இது கூந்தலை நீளமாக வளரச் செய்யும். மூளையின் கொதிப்பைத் தணியச் செய்யும். கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும். சிரசிலுள்ள பல வியாதிகளையும் நிவர்த்தி செய்யும். கண்களில் நீர்வடிதல், தலையில் புண், மயிர்வெடிப்பு, மயக்கம், தலைச்சுற்றல், தேக நமைச்சல், சொறி, சிரங்கு, கற்றாழை நாற்றம், மனோ வியாகூலம், ஞாபகமறதி இவைகளைப் போக்கடித்துத் தேக ஆரோக்கியத்தைத் தந்து வாசனையை உண்டாக்கும். இந்தத் தைலம், பல வனமூலிகைகளால் சாஸ்திரப்படி தயார் செய்யப்பட்டது. இதில் ஒரு டின் தைலம் வாங்கிப் பார்த்தால் இதன் அருமை விளங்கும்.




# கிருஷ்ணா சஞ்சீவி

தலைநோய், பாரிச வாய்வு, சுளுக்கு, புண்கள், காயங்கள், வீக்கங்கள், கொப்புளங்கள், கட்டிகள், இருமல், மூச்சடைப்பு, தேள் கொட்டின விஷம் இவைகளைத் தீர்ப்பதில் இது முதன்மை பெற்றது. நோய்கண்ட இடத்தில் இந்த கிருஷ்ண சஞ்சீவியைத் தடவி நன்றாய் இரண்டு மூன்று நிமிஷங்கள் வரை தேய்த்தால், அது மாயமாய் ஓடிவிடும். இளங் குழந்தைகளுக்குக் காணும் சைத்திய நோய்களுக்கும் இதை உபயோகிக்கலாம். இதன் புட்டிகள் ஆயிரக்கணக்காகச் செலவழிந்து கொண்டு வருகின்றன. ஒவ்வொரு குடும்பத்திலும், பிரயாணிகள் கையிலும் இந்த கிருஷ்ண சஞ்சீவி இருந்தே தீரவேண்டும். இதன் விலை புட்டி 1-க்கு அணா 3. டஜன் 1-க்கு ரூ. 5.

---

விலாசம்:- தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 107, மதராஸ்

# "பிரசண்ட விகடன்"

## மாதம் இருமுறை வெளிவரும் ஒரு ஹாஸ்யப் பத்திரிகை.



இதில் சிறப்பாக அரசியல், சமூக விஷய, சமயவியல் சம்பந்தமான எல்லா விஷயங்களும் விலாப் புடைக்கச் சிரிக்கச் செய்யும் தோரணையில் தமாஷாகவும், வேடிக்கையாகவும், விநோதமாகவும், கேலியாகவும் வெளிவரும். ஏராளமான அபூர்வ அதி விசித்திரப் படங்கள் பத்திரிகையை அலங்கரித்து வரும். தேச சமூக விருத்திக்கு உழைப்பது. இன்றே சந்தாதாரராகச் சேருங்கள்.

ஆண்டுச் சந்தா தபால் கூலி
உட்பட உள்நாடு ரூ. 2—0—0.
வெளிநாடு ரூ. 3—0—0.
தனிப்பிரதி விலை அணா 1½.

குறிப்பு:—ஏஜண்டுகளாக விரும்புவோர் நமது காரியாலயத்திற்கு எழுதி விவரம் தெரிந்துகொள்ளலாம்.

ரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள ஹிக்கின்பாதம் புஸ்தகசாலைகளிலும் "சுதேசமித்திரன்" புஸ்தக சாலைகளிலும், எல்லா ஊர்களிலுமுள்ள ஏஜண்டுகளிடமும் "பிரசண்ட விகடன்" 1½ அணாவுக்கு விற்கப்படும்.

ஏஜெண்டுகள் இல்லாத ஊருக்கு ஏஜண்டுகள் தேவை.

---

மானேஜர், "பிரசண்ட விகடன்" ஆபீஸ்.
நெ. 8, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.